# செந்தமிழ்ச் செல்வி




சிலம்பு ௨௬ } திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௨, மார்கழி { பரல் ௫
ஜனவரி, 1952

## நூல் நிலையம்

உலகு, ஊர், உறையுள், உடை, ஊண், உழைப்பு, உறவு, ஒழுக்கம், உணர்வு, உண்மை என்னும் பொருள்கள் ஒருவரின் நல்வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படுவன. இவற்றுள் ஒன்றின் காரணமாக ஒன்று பிறத்தலும் சிறத்தலும் முறையே காணலாம். இவற்றுள் உண்மை மெய்ப்பொருளாகிய கடவுளையும், அதற்குரிய நேரிய வழியாகிய மெய்யுணர்தலையும், அம் மெய்யுணர்வுக்குத் துணையாகிய வாய்மையையும் குறிக்கும்.

இவை நல்லுணர்வு ஒன்றானே பெறப்படுவன. உடலை வளர்க்கும் ஊண் போன்று உயிரை வளர்ப்பது நல்லுணர்வாகும். நல்லுணர்வு நூலானும், நூல்கற்ற நுண்மாண் நுழைபுலச் செல்வர்களானும், அப் பெருஞ்செல்வர்கூடி அளவளாவி மகிழும் நல்லவைகளானும், அந்நூல் நின்று ஒளிரும் நூல்நிலையங்களானும் நாளும் வளர்ந்து நலந்தருவதாகும்,

> " இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
> வேளாண்மை செய்தற் பொருட்டு" திருக்குறள், ௮௧

என்னும் தெய்வத் தமிழ்மறை வேளாண்மை செய்தற்கே கூடி வாழ்தலும் நாடு, ஊர், பேரூர், நனிநாகரிக வாழ்வு பெறுதலும் எனப் பெரிதும் வலியுறுத்துகின்றது. இவை நூலுணர்வின்றி எய்துவ எனக் கூற எவரே முற்படுவர்? நுவலுமின். அந்நூல் நூல்நிலையங்களின்றி எங்ஙனம் மிளிரும்? நூல்நிலையங்களைப் போற்றிப் புகல்வதற்கே கற்பதென்பது மிகையாகாது. திருந்துறக் கற்றுச் சிறப்பதிங் கெல்லாம்—பொருந்துநூல் போற்றற் பொருட்டு, என்னும் சிவபுண்ணியத்திற்கேயாம். இவ்வுண்மை,

"ஞானநூல் தனையோதல் ஓது வித்தல்
 நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்று
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
 இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை
ஊனமிலாக் கன்மங்கள் தபஞ்செபங்கள் தியானம்
 ஒன்றுக்கொன் றுயருமிவை ஊட்டுவது போகம்
ஆனவையான் மேலான ஞானத்தால் அரனை
 அருச்சிப்பர் வீடெய்த அறிந்தோ ரெல்லாம்"
—சிவஞான சித்தியார், அ. உ - உ௩

என்னும் பொருளுணர் கருவியாம் மெய்கண்டநூலின் திருப் பாட்டால் நன்கு உணரலாம். மேலும்,

"திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்" என்னும் ஆளுடைய அரசர் அருளிய, (சு. ௩0சு - சு) திருப்பாட்டும் இவ்வுண்மையினையே வலியுறுத்துதல் காண்க.

"மற்றுநீ வன்மை பேசி வன்றொண்டன் என்னும் நாமம்
பெற்றனை நமக்கும் அன்பில் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டே யாகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்"
திருத்தொண்டர்சீர், தடுத். எ0

என்னும் திருப்பாட்டால் கடவுள் வழிபாட்டின் உயிர்நிலையாக வுள்ளது திருப்பாட்டு ஓதுதலேயாகும் என்னும் உண்மை உணர்த்தப்படுகின்றது. நாயன்மார்கள், ஆழ்வாராதியோர் முதலிய தெய்வச் சான்றோர்கள் ஓதி வழிபட்டருளியதும், நாம் நச்சி வழிப்பட்டு உய்ய எய்ப்பில் வைப்பாம் எச்சமாய் வைத்தருளியதும் திருமுறைத் தெய்வநூல்களேயாம்.

நூல் நிலையங்கள் ஒவ்வொரு வீடுதோறும் உடலுயிர் போன்று இன்றியமையாது நின்று நிலவவேண்டும் சிறப்புடைப் பொருள்களாம். மக்கள் கூடி மகிழ்ந்துறவாடி மாண்பொருள் வளர்க்கும் தெருவுதோறமைந்த பொதுக் கழகங்களிலும், ஊருக்குப் பொதுவாம் அம்பலங்களிலும், நாட்டுக்குப் பொதுவாம் பேரம்பலங்களிலும், திண்ணைப்பள்ளி, துவக்கப்பள்ளி, நடுநிலைப் பள்ளி, உயர்நிலைப்பள்ளி, கல்லூரி, அடங்கற் கல்லூரி (University) முதலிய சொற்புலம் வளர் நற்புலங்களிலும், செம் பொருள் பெருக்கும் திருமடங்களிலும், அப் பெரும்பொருளின் அருள்நிலைக் குறியாம் திருக்கோவில்களிலும், ஆன்றவிந் தடங்கிய சான்றோர் கூடும் தெய்வக் கூடற் கழகங்களிலும் நூல்நிலையங்கள் நின்று நிலவ வேண்டுவனவன்றோ?

தொன்றுதொட்டு நம் செந்தமிழகத்து நூல்பேணும் நன்முறை உயிரினும் சிறந்து ஓம்பப்பட்டு வருகின்றது. அது, திருமுறைகளைச் சிவனுறை திருக்கோவிலாகவே நினைந்து மலர் தூவிப்

புகை யொளி காட்டி வழிபட்டு, அம்முறையினை அன்புடன் எடுத்து ஓதிவரும் பெரியோர் ஒழுகலாற்றுண்மை இன்றும் ஆங்காங்கு நெகிழவிடாது நிகழ்ந்து வருதலால் உணரலாம். உடலகத்துயிர் உள்வழி ஊண் உண்பதுபோல், உணர்வுநூல் சாந்துணையும் ஓதிவருதல் ஒவ்வொருவர்க்கும் கடனேயாம். இம் முறை வரவர ஏட்டுப்பூசையளவில் வீட்டகத்தும், ஒன்பானிர வாம் நவராத்திரி நல்விழாவில் வேட்டையளவில் நாட்டகத்தும் ஒடுங்கி உண்மையுணர்ச்சிக்கு இடமின்றிப் போயிற்று.

பண்டு ஒருவன் பொழுது கழிப்பது கற்றலிலேயே என் னும் கட்டுரை, "....உயர்மதிற் கூடலின் ஆய்ந்தவொண் தீந் தமிழின்—துறைவாய் நுழைந்தனையோ" என்னும் திருச்சிற் றம்பலக் கோவையாரின் செழும்பொருள் திருப்பாட்டான் உணரலாமன்றே? திருவள்ளுவப் பெருந்தகையார்,

"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு" —திருக்குறள், ௩௯௭

என்றருளிச் செய்தனர். ஒருவரை எல்லாரும் விரும்புவது அவர் தம் அருட்கொடையாலேயாம். அக்கொடை இருவகைப்படும். அவை செல்வமும் சிறப்பும் என்ப. செல்வம் இம்மை அம்மை மறுமை வாழ்வுகள். சிறப்பு அழிவில் வீடுபேறு. முன்னையவை பொருளானும். பின்னையது கேடில்விழுச் செல்வமாம் கல்வியா னும். என்னை? "சொற்றமிழ் பாடுகென்றார்" எனச் சேக்கிழார் அடிகளும், "....கற்று வல்லனுகப் புகழ் பொருள் நட்பு அறன் நான்கும் பயக்கும்.....இனி, அறனும் பயக்கும்; என்னை, ஞானத் தின் மிக்க கொடை இன்மையான் என்பது" என, களவிய லுரைப் பாயிரத்தின்கண் நல்லிசைப் புலவர் நக்கீரனாரும் அரு ளிப் போந்தமையான் என்க.

ஒருவர் அரும்பாடு பட்டுப் பொருளீட்டுவதும், கற்பதும், மகப்பெறுவதும், அறம் புரிவதும், அருளடைவதும் அவ்வத் துறைமருங்கின் ஏனையாரை உய்ப்பதன் கண்ணேயே முடிவுறும். தன்னளவிலிருப்பின் வித்து விளைவின்றி யார்க்கும் எத்துணை யும் பயமில்லாமல் இருக்கும் அந்நிலையேயாம். இவ்வுண்மை,

"நான் பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்" என்னும் திருமூலர் திருமந்திரத்தானும்,

"உளரெனினும் இல்லாரொடு ஒப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்" —திருக்குறள், எ௩0

என்னும் திருவள்ளுவப் பயனானும் தெற்றென விளங்கும்.

புலவர் செல்வர் இல்லங்களிலும், திருமடங்களிலும், திருக் கோவில்களிலும், தொன்றுதொட்டு நூல்நிலையங்கள் வழிவழி யாகப் பேணிவந்தமையானே எஞ்சியுள்ள சங்க நூல்களும், திரு

முறைகளும் பிறவும் நம்மனோர்க்கு இஞ்ஞான்று கிடைத்து இன்புறவும் இன்புறுவிக்கவும் வாயிலாயிற்றெனக.

திண்ணைப்பள்ளி மாணவர்கள் கற்றுத்துறை போயபின் சின்னாட்களுக்கு உயர்ந்த தமிழ்நூல்களைப் படியெடுக்கும் பண்புடைக் கடனுடையரா யிருந்தனர். அதனாலேயே அச்சுப்பொறி வாய்ப்பில்லா அந்நாளில் பழநூல்கள் பழுதுற்றிறவாமலும், புதுநூல்கள் எழுதுருது பரவாமலும் போதற்கிடனின்றிச் சிறந்தோங்குவவாயின. இவ்வகை எழுத்துத் தொண்டுக்குச் 'சரவை' எழுதுதல் என்று பெயர். இஃது, ஆசானைச் சார்ந்தும் ஆன்றோரைச் சார்ந்தும் அவர் ஆணைவழி நின்று எழுதப்பட்டு வந்தமையால் சார்வை எழுதுதல் என்பது சரவை எழுதுதல் என மருவிற்றுப்போலும்! இவ்வெழுத்தின் ஏற்றமே அந்நாளில் அதுவற்குத் தெரிந்துதெளிதற்கு இந்நாள் கலைத்துறைப் பட்டம் போல் உறுதுணையா யிருந்ததென்க. எனவே தமிழகத்துக்கு நூல்நிலையக் கொள்கை புதுவதன்று. ஆயினும் இடையே கைவிட்டு மழுக்கமுற்றிருக்கும் நிலையை நீக்கிப் பண்டுபோல விழுப்பமுறத் தோன்றியதே இந் நூல் நிலையக்கொள்கை என்க.

ஒவ்வொருவரும் தத்தம் வருவாயில் ஒரு சிறுகூறு நூல் வாங்குவதற்கென ஒதுக்கல்வேண்டும். ஆடை அணி முதலிய நிலையிலாப் பொருளின் மிக்கதாய் நிலையுள்ள நூலைக் கருதும் வாழ்க்கை சாலச் சிறந்ததெனக் கருதுதல்வேண்டும். ஏனையாரையும் கருதச் செய்தல்வேண்டும். சொல் இல்வழிப் பொருளை யுணர்வது அரிதாவது போல, நூல் இல் வழி நுண்பொருளாம் இறை உயிர் தளை என்னும் முப்பொருளுண்மை தெளிவது அரிதாகும். ஆகவே இறைவன்றன் உண்மையைக் காட்டு முதன்மையும் சிறப்பும் ஒருங்குவாய்ந்த கருவி நூலேயாகும்.

இதுபற்றியே பண்டைச் சான்றோர்,

"பூமாலைக்கு ஏதுபுகழ் பொன்மாலைக்கு ஏதுமணம்
பாமாலைக்கு உண்டே பயன்"

என அறிவுறுத்தி யுள்ளனர். நூல்நிலையம் பெருகுவதற்கு வழி மணமக்கட்கு வழங்கும் பரிசுப் பொருள்களில் நூல் வழங்குவதற்கே முதன்மை அமைதல்வேண்டும். ஒரு வீட்டின் சிறப்பை வாழும் மாளிகையாலும், ஆளும் பண்டங்களாலும் இப்பொழுது மதிப்பிடுகின்றோமன்றோ? அவற்றைவிட முதன்மையாக நூல் நிலையத்தைக் கொண்டு மதிப்பிடுதல் என்னும் வழக்கு இனிப் பெருகுதல்வேண்டும். 'பாடம் ஏறினும் ஏடது கைவிடேல்' என்பது பழமொழியன்றோ? ஏடது கையுறின் பீடது பெருகும் என்னும் நிலை பெருகுதல்வேண்டும்.

இப்பொழுது நூல் நிலையக் கிளர்ச்சி நம் சென்னைக் கோநகர்க்கண் துவங்கப் பெற்றுள்ளது. அதை வரவேற்கின்றேம். அது வளர்ந்து நாட்டுக்கும் மொழிக்கும் நன்னெறிக்கும் நலம் பயக்கவேண்டும் என்று ஆண்டவனை வேண்டுகின்றேம், அந் நிகழ்ச்சியின் சுருக்கம் வருமாறு:—

25-12-1951-இல் சென்னை மலைப்பெரு (Mount Road) வழியில் அமைந்த இராசாசி மண்டபத்தில் நூல் நிலைய மாநாடு துவங்கப்பெற்றது. அதற்கு டாக்டர். ஆர். எம். அழகப்பச் செட்டியாரவர்கள் தலைமை பூண்டார்கள். மாநாட்டை அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கள் தொடங்கி வைத்தார்கள். புத்தகக் கண்காட்சியை மத்திய ஆட்சியாளரின் இருப்புப் பொறி யூர்தி (இரயில்)த் துணை அமைச்சர் திரு. கே. சந்தானம் அவர்கள் திறந்து வைத்தார்கள். திரு. சர். ஆர். கே. சண்முகம் செட்டியாரவர்கள், வேத்தவைப் புலவர் நாமக்கல் கவிஞர் திரு. இராமலிங்கம் பிள்ளை அவர்கள் போன்ற அளவிலா ஆர்வமுடைய ஆன்றேர் பலரும் மாநாட்டில் கலந்து மாண்புறுத்தினர். கல்கி ஆசிரியர் திரு. ரா. கிருட்டினமூர்த்தி அவர்கள் நூற் கண்காட்சி அமைந்த முறையைத் திறம்பட விளக்கினர்கள். கண்காட்சிக்கு நூல் அளித்து உதவிய மேலோர் அனைவர்க்கும் நன்றி அறிவித்தனர். மக்கள் இருபாலாரும் பெருந்திரளினராக வந்து தொக்கிருந்தனர்.

வரவேற்புக்குழுத் தலைவர் வி. பாஃசியம் ஐயங்கார் அவர்கள் பேசுகையில் நாட்டுத் தலைவர்களும் நல்லறிவுவாய்ந்த பேரன்பர்களாம் பத்தர்களும் பொது மக்களின் நல்லறிவு வளர்ச்சிக்கு வேண்டிய நூல்நிலையங்களை நிறுவி அவைகளைப் பெருமக்கள் எளிதாகவும் நன்கொடையாகவும் பயன்படுத்திக் கொள்ளுமாறு வேண்டும் ஏற்பாடுகள் செய்யவேண்டும். ஏனைய நாகரிக நாட்டைக் காட்டிலும் நம் நாவலந்தீவாம் இந்தியநாடு இத்துறையில் மிகவும் தாழ்ந்த நிலையில் இருக்கின்றது. 1950-ஆம் ஆண்டுச் சட்டப்படி அரசியலார் நூல்நிலையங்களுக்கென வரி வாங்கிவருகின்றனர். பல நூறுயிரம் பணம் சேர்ந்திருக்கிறது எனினும், அதற்குத் தகுந்தபடி நூல்நிலைய வளர்ச்சி காணப்படாமை வருந்தத்தக்கது. சென்னை மண்டிலம் இப்பொழுது முன்னேறி வருகின்றது என மொழிந்தனர்.

அமைச்சர் பக்தவத்சலம் தொடங்கி வைத்துப் பேசுங்கால் நூல்நிலையங்களே பொதுமக்களின் அறிவை வளரச் செய்யும் திருக்கோவில்கள். ஒழுக்கக்கேடாம் இழிந்த நூற்கள் இங்கு இடம்பெறு. அறிவை வளர்ப்பதும், அனைவர்க்கும் பெரும்பயன் தருவதும் ஆகிய இழுக்கவுடையுழி ஊற்றுக் கோலனைய ஒழுக்க மிக்க விழுத்தகு நூற்களுக்கே இடம் பெறும் என்பதாம்.

கண்காட்சித் திறப்புவிழாத் தலைவர் திரு. சந்தானம் அவர்கள் பேசுகையில் நம் நாட்டுப் பள்ளிக்கூடம் ஒவ்வொன்றி லும் ஒரு நூல்நிலையம் நிறுவப்படுதல் வேண்டும். அதன் பொறுப்பினை ஓர் ஆசிரியர்பால் ஒப்படைத்தல் வேண்டும். அவர்க்கு அதற்கெனத் தனி உதவிப்படியும் வழங்கல்வேண்டும். அறிவை வளர்ப்பதும் ஆண்டவன் அன்பாம் பத்தியினைப் பெருக்குவதுமாகிய நல்லொழுக்க நூற்களே ஆங்கு இடம் பெறுதல் வேண்டும். மேலும்,

நம் நாட்டுத் திருக்கோவில்களில் ஒவ்வோர் நூல்நிலையம் நிறுவி அதற்கு வருவாயில் ஐந்திலொன்று வழங்கலாம். நன் கொடைப் படிப்பகம் (இலவச வாசகசாலை) நிறுவி உறுப்பினர் இறுக்கும் பணங்களிலிருந்து பல்வேறு செய்தித்தாள்களும் பொழுது போக்குக் கதை நூல்களும் அமைக்கலாம். (உடலுயி ரென இரு கண்ணெனத்தகும் இருபெரும் செல்வமும் எய்துதல் வேண்டும்.) செல்வர்கள் தங்கள் தங்கள் வீடுகளில் ஒவ்வோர் நூல்நிலையங்களை நிறுவல்வேண்டும். இதைக் குறித்து அப் பெருஞ் செல்வர்கள் பெருமிதம் கொள்ளுதல் வேண்டும். இந் நான்கு வழியையும் கையாண்டால் சில ஆண்டுகளில் பல ஆயிரக் கணக்கான நூல்நிலையங்கள் ஏற்படும். அறிவின் அடிப்படை யிலேயே தமிழ்நாடு நிறுவப்படுதல் வேண்டும் என்பதாம்.

மாநாட்டுத் தலைவர் டாக்டர். ஆர். எம். அழகப்பச் செட்டியாரவர்கள் பேசுகையில் நகராண்மைக் கழகங்களும், மாவட்ட அமைப்புக்களும் (சில்லாபோர்டு) வருவாயில் நூற்றி லொருபங்கை நூல்நிலையங்களுக்கென ஒதுக்கி வைத்தல் வேண்டும். அறிவுவளர்ச்சியில் ஆர்வங்கொண்டார் ஒவ்வொரு வரும் பதின்மரையேனும் அத் துறையில் ஆர்வங் கொள்ளச் செய்தல்வேண்டும். ஒவ்வொரு சிற்றூரிலும் ஒரு நூல்நிலையம் அமைக்கப்படுதல் வேண்டும். உண்மைச் சான்றோரின் உயர்ந்த வரலாறுகள், உலகப் பொருள்கள் முதலியவற்றைப்பற்றிப் பல வேறு துறைகளில் தக்கவாறு எழுதும் மிக்கோர் பலர் இருந்தா லொழிய நாடு திருந்தி முன்னேற முடியாது.

தேனீர்க்குடியும், மாணீரணையார் இன்னிசையும், கடற் கரையின்கண் உலாவுதலும் போன்ற பழக்கங்கள் மக்கட்கு மிக்கிருப்பது போன்று, நூல் படிக்கும் சீலமும் வழக்கமாய்ப் பெருகுதல் வேண்டும் என யாவரும் விழைவுற விளக்கினர்.

ஆடையணி மேடை அழகொத்து நூல்நிலையம்
நாடவர்கள் கூடிநூல் நாள்ஓதல்—கூடுமேல்
ஒற்றுமையே செல்வம் உரனே உயிரழகு
வற்றா அருளும் வரும்.

—இதழாசிரியர்.

# மகிழ்ச்சிப் பொங்கல்!

[முத்தமிழ்மணி]

க. "பொங்கலோ பொங்கலெனப் புகழ்வீர்; அத்தான்!
புதுமையிதில் கண்டதுநீர் புகல்வீர்," என்றே
திங்கள்முகக் கருங்குழலாள் சாற்றி மேலும்,
"திகழுநில உலகமெலாம் பொங்க லுண்டோ?
செங்கரும்பும் தீம்பாலும் அளைந்து பொங்கிச்
செழுங்கதிரை வாழ்த்திவழி படுவ தென்னே?
இங்கெனக்கு விளக்கமுற உரைப்பீ ரத்தான்,"
என்றிசைத்தாள் எழில்விழியாள் என்னை நாடி.

உ. "உழைப்பிற்கும் உழவிற்கும் சிறப்புச் செய்ய
ஒண்டொடியே! பொங்கலிதில் உனக்கேன் ஐயம்?
பிழைப்பிற்கு வழியறியா தலைந்த சில்லோர்
பெருஞ்சூழ்ச்சி கைக்கொண்டே இடம்பெ யர்ந்து
அழைப்பில்லா விருந்தினர்போல் நமது நாட்டில்
அடிவைத்து விட்டார்கள்; அவர்கள் கொள்கை
தழைப்பதினால் தமிழ்மரபு தலைசாய்ந் தந்தோ
தனித்திறமைச் செயலிழந்தார் தமிழர்," என்றேன்.

ங. "வெட்கமத்தான்! வெட்கம்! வெட்கம்! தமிழ ரெல்லாம்
வீரமிலாக் கோழைகளே! அவர்கட் கின்னும்
உட்கலக்க மிலைபோலும்! உறுதி சேர்ந்த
ஒற்றுமைக்கு நம்நாட்டில் பஞ்சம் அத்தான்!
எட்கடையும் உணர்வற்ற எழிலு ருக்கள்
ஏடவிழ்ந்த மலரானார் நீர்நி றைந்த
மட்கலங்க ளாகிவிட்டார்; மதியி ழந்தார்;
மகிழ்பொங்கல் விளக்கிடுவீர்," என்றாள். பின்னும்,

ச. "வேற்றார்நம் வளநாட்டில் விதைத்த கொள்கை
வித்துக்கள் வானோங்கிக் கிளைத்துத் தந்த
ஆற்றாத கொடுங்கனிகள் அனைத்தும் தின்றே
அறிவிழந்தார் நம்தமிழர் அவர்க ளன்பாம்
ஊற்றெல்லாம் விழற்கிறைத்த நீரா யிற்றால்;
உறுதியிழந் தேயறிவுப் போரி லின்று
தோற்றோடி நிற்கின்றார்! அத்தான்! பொங்கல்
தொல்சிறப்பை விளக்கிடுவீர்," என்று ரைத்தாள்.

ரு. "வண்ணமழை நல்கிநிலம் வளம தாக்கி,
வையமுழு தும்செந்நெல் கூல மெல்லாம்
திண்ணமுறக் கொழித்துமக்கள் பசியைத் தீர்த்தே
திகழுமொரு வெங்கதிரோன் தனக்கு நன்றி

பெண்ணணங்கே! செலுத்திடுவான் வேண்டி நாமும்
பெருமகிழ்வோ டேபோற்றும் நாளே பொங்கல்!
மண்ணகத்தார் மகிழ்வுபெறும் பொங்கல்! முன்னோர்
மதிநலத்தால் தோன்றிற்று; உனக்கேன் ஐயம்?

சு. "'சிலையல்ல தமிழனுக்குச் சிந்தை யுண்டு;
செயற்கரிய திறனுண்டு,' என்ற உண்மை
நிலைகொள்ள எழுந்தபெரும் பொங்கல், இந்த
நீணிலத்தில் வேறெந்த நாட்டி லுண்டு?
கலைவளர, புதுமைமணம் கமழ மற்றும்
கருத்தோடை தேக்கிவிளை நிலமாம் மக்கள்
உலைவின்றிப் பெருவாழ்வு வாழப் பொங்கல்
உயர்ந்துமலர்ந் திட்டதிதில் உனக்கேன் ஐயம்?

எ. "காலமுழு தும்வயலில் உழைத்து ழைத்துக்
கைசோர மெய்சோர வாடி நிற்போர்
பாலமுது பொங்கியதில் ஏல மிட்டுப்
பைந்தமிழின் சுவைசேர்த்துப் பரிதி நோக்கி
ஞாலமுழு தும்உய்ய வேண்டி, மற்றும்
நலமெல்லாம் பெற்றிடவே நயந்து, காதல்
பாலமதில் நின்றுழவின் பயனைப் போற்றும்
பசும்பொங்கல்! பைந்தொடியே! உனக்கேன் ஐயம்?

அ. "உகுத்துக்கண் ணீர்வடிய வயல்தி ருத்தி
உழுதுழுது நிலம்செழிக்கச் செய்யு மந்த
பகுத்தறிவில் லாதஉயி ரினமொன் றுண்டால்;
பரிதவிக்கும் அவ்வினத்தின் மேன்மை தன்னை
அகத்தினிலே கொண்டதற்கு நன்றி காட்ட
அடுத்துவந்த தோர்மாட்டுப் பொங்கல்; ஆன்றோர்
வகுத்திட்ட திட்டங்கள் வகையாய்ச் செய்தார்.
வார்குழலாய்! வண்பொங்கல்! உனக்கேன் ஐயம்?

கூ. "தைத்திங்கள் தனிலுழவர் சிறப்புக் காண்பார்;
தகர்த்தெறிந்தே பகைமையெலாம், ஒன்றி மக்கள்
கைத்தொழிலின் சிறப்புணர்வார்; வையம் வாழ
கைதொழுவார் உழவன்திருத் தோள்கள் நோக்கி;
மைத்தடங்க ணொண்டொடியே! தமிழி னின்பம்,
மதலைதரும் குதலையின்பம் ஒன்று கூட்டி
வைத்திங்கே பொங்கிடுவோம் பொங்கல்; இன்ப
வாரிதியே! உண்டிடுவோம் மகிழ்ச்சிப் பொங்கல்!"

---

# தமிழ்த்தாய்க் கோலை

[கணியர், டாக்டர் திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை]

(செல்வி—சிலம்பு உ௬; பரல் ௮ பக்கம் ௧௭௧-ன் தொடர்ச்சி)

**அண்ணாமலைப் பல்கலைக்கழகம்**

'அண்ணாமலைப் பல்கலைக்கழகம் எழுத்து மாற்றம் பற்றி அரசாங்கத்துக்கு அனுப்பிய கருத்து யாது?' என அக்கழக ஆட்சியாளரை வினவினோம். அதற்கு மிக்க பேரன்போடு அவர்கள் விடுத்த மறுமொழி பின்வருமாறு :—

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

எண் ROC. A 2/17686/51. 1951 அக்டோபர், 11.

அனுப்பு :

ஆட்சியாளர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலைநகர்.

அமைச்சரவர்களுக்கு,
சென்னைமாகாணத் தமிழ்ச்சங்கம்,
திருநெல்வேலி.

ஐய,

பார்வை—தமிழ்எழுத்துத் திருத்தம் பற்றிச் சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தின் தீர்மானங்கள்.

மிக்க அன்புடன் எனக்கு அனுப்பப்பெற்ற சங்கத் தீர்மானங்களின்மேல், இப்பொருள் பற்றி இந்தப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையினருடைய கருத்துக் குறிப்பிற்கு ஒருபடி தங்கள் பார்வைக்கு இதனுடன் அனுப்பியிருக்கிறேன்.

அன்புள்ள,
(ஒப்பம்)........................
ஆட்சியாளர்.

**அக்கருத்துக் குறிப்புப் பின்வருமாறு :—**

தமிழ்எழுத்துத் திருத்தம்

1. 1948 பிப்ரவரி 10௨ கூடிச் சில கொடிய கிளர்ச்சியான கடு மாறுபாடுகளைச் செய்ய எண்ணிய கூட்டத்தின் முடிவுகளைக் காட்டிலும் இக்கழகத்தின் முடிவுகள் ஏற்றுக்கொள்ளக் கூடியனவாக இருக்கின்றன.

2. தெருவில் உள்ள தமிழ்மகனே அல்லது பள்ளியில் உள்ள தமிழ்க் குழந்தையோ இப்போதுள்ள தமிழ்எழுத்துக் களைக் கற்றுக்கொள்வதில் மிகவும் தொல்லைப்படுகிறார்கள் என்பது இல்லை. அவை வேண்டுமானால் புற நாட்டானுக்குச் சிறிது குழப்பமாகத் தென்படலாம். இப்போதுள்ள எழுத்துமுறையை மாற்றாமல் அப்படியே வைத்துக்கொள்ள வேண்டுமென்பதற்குச் சார்பாகப் பேசுவதற்குத் தக்க காரணங்கள் மிகுதியாக இருக்கின்றன. எந்த எழுத்துமுறையும் உலக வழக்காற்றினாலே நிலைபெற்றுப் போகின்றது; இப்போது வழக்காற்றிலுள்ள எழுத்துக்கள் குறைந்தது எட்டு நூற்றாண்டுகளாக நிலைபெற்றிருக்கின்றன.

3. மிகவும் நன்கு கருதவேண்டிய நிலைமை பின்வருவது: இன்று தமிழிலுள்ள நூல்களெல்லாம் இப்போதுள்ள எழுத்துக் களினாலேயே அச்சிட்டு அமைந்திருக்கின்றன. கிருஃச்துநாதர் பிறப்பதற்கு நான்கு ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்து இன்றுவரையுள்ள, சங்ககாலம், இடைக்காலம், இக்காலம் ஆகிய எல்லாக் காலங்களுக்கும் உரிய நூல்களெல்லாம் இப்போது வழக்காற்றிலுள்ள எழுத்துக்களிலேயே அச்சிடப் பெற்று நமக்குக் கிடைக்கின்றன. எழுத்துக்களில் மாற்றங்கள் செய்யத்தான் வேண்டுமென்று முடிவாகத் தீர்மானிக்கப்பட்டால் திருத்தப்பட்ட எழுத்துக்களிலேயே அந்த நூல்களையெல்லாம் திரும்ப அச்சடிக்கவேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும்.

4. ஆகையினாலே இலனே அச்சுமுறையைப் பின்பற்றும் நாட்டார்களின் கருத்துக்களைக் கவனித்து மாறுபாடுகள் செய்யத்தான்வேண்டும் என்றால், மாறுபாடுகளை மிகமிகக் குறைவாகச் செய்துகொள்வதுதான் அறிவுக்குப் பொருத்தமானது.

5. இந்த மாதிரியாக ஆராய்ந்தால் 1948-க் கழகத்து முடிவுகளைக் காட்டிலும் 1950-க் கழகத்து முடிவுகளே மிகுதியாக ஏற்றுக்கொள்ளக் கூடியனவாகக் காணப்படுகின்றன.

6. நாட்டில் ஒன்று பழையது, மற்றொன்று திருத்தப்பட்டது என்று இரண்டுவிதமான எழுத்துமுறைகள் இருக்குமானால் ஒன்று மற்றொன்றை வென்று நிலைபெறுகிறவரை ஒருவிதமான குழப்பமே இருந்துவரும். இப்போதுள்ள எழுத்துமுறையில் படிக்கப்பழகிய முதியோர்கள் புதிய முறைக்குத் தம்மைச் சரிப்படுத்திக்கொள்ளவேண்டும்; இது செய்துகொள்ளக்கூடியதுதான். என்றாலும், எத்தனை எத்தனையோ தலைமுறைகளாக வாய்த்துள்ள பெருநிதிகளாகிய இப்போதுள்ள எழுத்துக்களில் அச்சிடப்பெற்றுள்ள நூல்களெல்லாம் இன்றுள்ள இளஞ்சிறார்களுக்கும் இனி வருங்கால மக்களுக்கும் பயன்பெறு

மல் அடைபட்டனவாமே என்று நான் அஞ்சுகின்றேன். ஆகை யினாலே புதுமுறை எழுத்துக்களிலே இப்போதுள்ள நூல் களெல்லாம் அச்சிட்டு வெளிப்படுத்தப்படும் என்று தக்கார் பொறுப்பேற்றுக்கொண்டு உறுதிதந்தாலல்லாமல் இப்போது சூழ்ந்து செய்யப்போகும் திருத்த எழுத்துமுறையைப் பின்பற்றுகிறதற்கு நான் சார்பாக இருக்கவேமாட்டேன்.

7. 1950 கழகத்தார் மேற்கொள்ளலாமென்று குறிப்பிட் டுள்ள திருத்த எழுத்துமுறையைச் செய்தித்தாள்களும், கையச் சுப்பொறி (Type-writers) களும்கூட ஆராய்ந்து ஒத்துக்கொள் வதில் மிகுதியான எதிர்ப்பு இருக்காது என்று தோன்றுகிறது. சிறுபான்மை கையெழுத்திலும் பெரும்பான்மை உரோமன் எழுத்திலும் ஆங்கிலம் அச்சிடப்படுகிறது. அங்ஙனமே புத்த கங்களுக்கு ஒன்றும் செய்தித்தாள்களுக்கு மற்றொன்றுமாக இருவகை அச்சுக்களை ஆக்கிக்கொள்ளலாம்.

8. திருத்தம் படிப்படியாகப் புகுத்தப் பெறவேண்டும் என் னும் கருத்துடையேன் நான்.

9. எடுத்துக் காட்டுதும் :—

(1) செய்தித் தாள்களில் முதல் ஐந்து ஆண்டுகளுக்குத் திருத்திய எழுத்துக்கள் புகுத்தப் பெறலாம். நாட் செய்தித் தாள்களிலே இந்த எழுத்துக்களைப் புதிதாகப் படிப்பவருக்கும் விளங்கக்கூடிய முறைகளிலே குறிப்புக்களும் விளக்கங்களும் நாடோறும் கட்டாயம் கொடுக்கப்பட வேண்டும். செய்தித் தாள்களின் பொறுப்பாளர்கள் இந்தக் காரியத்துக்காக ஒரு பகுதி இடத்தை அத்தாள்களில் நாடோறும் ஒதுக்கித்தரக் கட் டாயம் பொறுப்பேற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

(2) இந்த ஐந்து ஆண்டுகளின் பின் எல்லா நூல்களும் செய்தித்தாள்களும் புது எழுத்துக்களாலேயே அச்சிடப் பெற வேண்டும் என்று அறிவிக்கப்படலாம்.

(3) செய்தித்தாள்களில் இந்தத் திருத்தம் புகுத்திய மூன் றாண்டுகளின்பின் நூற்பதிப்பாளர்கள் திரும்ப அச்சடிக்கும் நூல்களை வேண்டுமானால் புதிய எழுத்துக்களில் அச்சிடும்படி செய்யலாம்.

10. நான் மேலும் பின் வருவனவற்றைக் குறிப்பிடு கிறேன்.

(1) பொதுவாகப் பாடப்புத்தகங்களாக வைக்கப் பெறாமையினாலே பதிப்பாளர்களைக் கவராதவைகளாகிய மிகு மதிப்புடைய அருமையான நூல்களைப் புதிய எழுத்துக்களில் அச்சிடும்படி மடாதிபதிகளையும், பல்கலைக் கழகத்தாரையும் வேண்டிக் கொள்ளலாம்.

(2) இந்த விதமான பணிக்குத்தக்க பொருட்கொடை யருள அரசாங்கம் முன் வரவேண்டும்.

(ஒப்பம்) அ. சிதம்பரநாதன் செட்டியார்,
தமிழ்ப் பேராசிரியர்.

“கொடுக்கமாட்டாத கோனுர் சினையாட்டைக் காட்டினுராம்!” என்பது பழமொழி. ஒருவன் ஒரு கோனுரிடத்திலே சென்று கொஞ்சம் ஆட்டுப்பால் வேண்டுமென்று கேட்டானும்; கோனுருக்குச் சம்மதம் இல்லை; ஆனுல் இல்லையென்று சொல்லவும் முடியவில்லை; முகத்தை எப்படி முறிப்பது? அதற்காக அக் கோனுர், “எல்லாம் உங்கள் ஆடுகள்; இந்த ஆட்டிலிருந்து பால் கறந்து கொள்ளுங்கள்,” என்று ஒரு சினையாட்டைக் காட்டினுராம். அதுபோலவே இருக்கிறது அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தார் அரசாங்கத்துக்கு விடுத்துள்ள மறுமொழி. எழுத்து மாற்றம் செய்வது சிறிதும் பொருந்தாது என்பதே அவர்களுடைய கருத்து என்பது மலைமேல்வைத்த விளக்குப் போலக் காணப்படுகிறது. அவர்கள் கூறுகின்றுர்கள் :—

“பல நூற்றுண்டுகளாக நிலைபெற்று வழங்கும் இப்போதைய எழுத்து முறையைக் கற்றுக்கொள்ள எந்தத் தமிழனும் தயங்காதபோது இக்கிளர்ச்சி எதற்கு. இந்நாள்வரை அச்சான நூல்களெல்லாம் இப்போது உள்ள எழுத்துக்களிலேயே அச்சிடப்பெற்றுள்ளன. பழைய எழுத்து புது எழுத்து இவை இரண்டும் ஒன்ருேடொன்று போராடி நிற்கும்; எது எதை வெல்வது என்று கண்டவர் யார்? பழைய எழுத்துக்களே இருக்கவேண்டும் என்பதற்குத்தான் தக்க காரணங்கள் மிகுதியாக இருக்கின்றன. இன்றுவரை அச்சான நூல்களை எல்லாம் புது எழுத்துக்களில் அச்சியற்றத் தக்கார் பொறுப்பேற்ருலல்லாமல் நாங்கள் இம்மாற்றத்துக்கு இசையவே மாட்டோம். கட்டாயம் புது முறையைப் புகுத்த வேண்டுமானுல் முதலில் இலைஞே அச்சில் செய்தித்தாள்கள் மட்டும் தொடங்கட்டும்; படிப்படியாகவே திருத்தம் புகுத்தப்பெறல் வேண்டும்; ஐந்தாண்டுகளின் பின்னர் வேண்டுமானுல் எல்லாரும் புது எழுத்தைப் பின்பற்ற வேண்டுமென்று வற்புறுத்தலாம்.”

அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தார் கூற்றை நன்ருகப் படித்துப்பாராமல் கல்வி மந்திரியார் உடனே புது எழுத்து முறையை யாவரும் கைக்கொள்ள வேண்டும் என்று ஆணையிட முற்படுகின்ருர். 1950-க் கழகத்தாரும் பலர், திரு. அவிநாசிலிங்கஞ் செட்டியாரவர்களுடைய முகத்தை முறிக்கமாட்டாமல் அவர் கூறிய திருத்தங்களில் மிகமிகச் சிறு பகுதிக்கு மட்டும் இசைவு காட்டுவதுபோல நின்றிருக்கின்ருர்கள் என்று மூன்

கட்டுரையிற் கூறினோம். அவர்கள் என்னென்ன சொல்லி இச் சிறு மாற்றத்துக்கு இசைந்தார்கள் என்பது தெரியவில்லை. எழுத்துக்கு ஏற்றபடி அச்சுப்பொறியை மாற்றி அமைப்பதுதான் அறிவுடைமை. காலுக்குச் செருப்பா, செருப்புக்குக் காலா?

**தமிழ் எழுத்து என்று அமைந்தது.**

"எழுத்து எனப்படுவ" என்று கூறுகின்றார் தொல்காப்பியர். அதற்கு மாதவச் சிவஞான முனிவர் "எழுத்து என்று ஒழியாது எனப்படுவ என்ப என்றார் இது முதனூல் ஆசிரியனால் விதிக்கப்பட்டுத் தொன்றுதொட்டு வரும்குறி என்பது அறிவித்தற்கு," என்று ஓதி யருளினர். இதனால் தொல்காப்பியம் தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழ் எழுத்துக்கள் வரிவடிவு பெற்றன என்பது விளங்கும். அவ்வெழுத்துக்களினாலேயே தொல்காப்பியமும் அதைப் பின்பற்றி யெழுந்த சங்கநூல்களும் திருக்குறளும் சிலப்பதிகாரமும் எழுதப் பெற்றன. இற்றைக்கு எழுநூற்றைம்பது யாண்டுகளுக்கு முன்னர் பவணந்தி முனிவர் தம் நன்னூலில் "தொல்லை வடிவின எல்லா எழுத்தும்" (சூ. 98) என்று கூறுகிறார். அத் தொல்லை வடிவினாலேயே இன்றுவரை எல்லா நூல்களும் எழுதப்பெற்று வருகின்றன; அவற்றுக்குத் தொல்லை விளைக்கத் துணிந்தனர் தமிழன்பர்.

பின்வரும் குறிப்புக்கள் நமது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் தொல்காப்பியம் எழுத்ததிகார முகவுரை பக்கம் 16, 17-ல் பல்கலைப் புலவர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் எழுதியன:—"உலகத்திலே எல்லாவகை மொழிகளிலும் பயில்கின்ற எழுத்தொலிகளை வகைப்படுத்தி அவற்றுள் தனி எழுத்தொலிகள் இன்ன எனவும், கலப்பொலிகள் எழுவதற்குக் காரணமாக அத்தனி ஒலிகளோடு ஒன்றுதல் பலவாதல் முன்னுதல் பின்னுதல் உடனுதல் இயைகின்ற சார்பொலிகள் இன்னவென்றும் பண்டைத் தமிழறிஞர் அறிந்திருந்தார்கள். தனி ஒலிகள் அனைத்தையும் தமிழ்மொழி நெடுங்கணக்கின் முப்பது எழுத்துக்களாக அமைத்து வைத்தனர். எவ்வகையான பேச்சொலியும் தனியொலி சார்பொலி அவற்றின் கலப்பொலி என்பவற்றுள் அடங்குதலால் அவற்றைத் தமிழெழுத்துக்களால் எழுதும் வன்மையும் நமது முன்னோர்பெற்றுத் திகழ்ந்தனர். இவ்வரிய நூலுணர்ச்சி உலகிலுள்ள எல்லா மொழிகட்கும் மிகவும் சுருங்கிய எளியவாகிய குறியீடுகளைத் தருவது. இந்நூலுணர்ச்சி உலகிற் பரவுமாயின் தமிழெழுத்து முறையே உலகெங்கும் பரவி பிற இலிபிகளின் இடர்ப்பாடும் பெருக்கமும் ஒய்ந்து ஒழியும்.... ........நமது முன்னோர் எழுத்து ஒலி முயற்சிக்குக் குறியீடு

அமைத்தனரேயன்றி, அவ்வொலிக்கு மாத்திரம் வடிவமைத்திலர். அதனால் எழுத்தொலி அளவிறந்து பெருகினும் குறியீடுகள் அள்வுட்பட்டனவாக அமைந்துள்ளன. இதுவே பெறற்கரிய பெரும் பேருக எழுத்து நூல்கள்பாற் கடைப்பிடிக்க வேண்டியது........இதனை மேலைத் தேசத்து எழுத்து நூல் வல்லார் உற்று நோக்குவாராக.''

இதனால், உலகத் தாய்மொழியாகிய தமிழ்மொழியின் எழுத்துக்களால் உலக மொழிகளையெல்லாம் எளிதில் எழுதிக்காட்டலாம் என்ற உண்மை நிலைபெறுகின்றமை காண்க.

**கிருந்த எழுத்துக்கள்**

" தனியொலிகள் முப்பதும் தமிழ்நெடுங்கணக்காக அமைந்த சீர்மை, உலகிற் பிற எம்மொழிக்கும் கிடையாது. சார்பொலிகள் கலக்கின்ற முறைகள் தமிழிலே மிகச் சுருக்கம். பிறமொழிகளுள் அவை தமிழினும் விரிவுடையன. இதனை உணராமையால் தமிழானது எழுத்தொலிகள் குறைந்த மொழி என வறிதே பிழைகூறுவர். அவர் தமது எழுத்தொலிநூல் அறியாமையைப் புலப்படுத்தினர் ஆவர். இனியேனும் பிற மொழிகளிலிருந்து எழுத்தொலிகளையும் அவற்றின் வரிவடிவத்தையும் தமிழுட் கடன்வாங்காது தமிழ்எழுத்துக்களின் துணை கொண்டே பிறமொழி ஒலிகளை நுண்ணூற்கு இயைய எழுதிக் கொள்ளும் ஆற்றல் தமிழர் பெற்றுய்வார்களாக,'' என்பது தொல். எழுத்து முகவுரை பக்கம் 18-ல் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் குறிப்பு.

தமிழன்பர்கள் சிலர், 'க்ஷ, ஸ, ஷ, ஹ, ஜ, ஸ்ரீ, f என்ற ஒலிகள் தமிழில் இல்லை; அவைகளைத் தமிழில் எழுதுவது எப்படி? ஆதலின் இவ்வெழுத்துக்களைத் தமிழில் புகுத்துதல்வேண்டும்,' என்று கூறுகின்றனர். இது அவர்களுடைய ஒலி இலக்கண அறியாமையையே உணர்த்துகின்றது. ஆய்த எழுத்தையும் பகர ஒற்றையும் சேர்த்தால் f ஒலி தானுக வருகின்றது. "French'' என்பதை "ஃப்ரென்ச்'' என்று எழுததல் எளிது. ஹ என்பது ஆய்தமே. "ஹரி'' என்பதை "ஃஅரி'' என்று எழுதிக்காட்டிவிடலாம்; இதில் ஆய்தத்தின்முன் வ் ஒலியும் இருக்கிறதாகக்கொண்டு எழுந்த கூட்டெழுத்தே ஹ என்பது. வ்ஃ என்பதையும் ஹ என்பதையும் கூர்ந்து நோக்குவார் இவ்வுண்மையறிவர். இங்ஙனமாகவே க்+ட்+ச் என்னும் மூன்றும் சேர்ந்த கூட்டெழுத்தே க்ஷ என்பது; கூர்ந்து காண்க. இவைகளில் ட்+ச் என்ற இரண்டும் சேர்ந்த வரிவடிவமே ஷ என்பது. ஃ+ச் இரண்டும் சேர்ந்த ஒலியே ஸ என்பது. ச்+ச இரண்டும் சேர்ந்தது ஜ என்பது. ஃ+ச்+ரீ என்ற

மூன்றும் சேர்ந்ததே ஸ்ரீ என்பது. இங்ஙனமாகிய தமிழ் எழுத்துக்களின் கூட்டெழுத்துக்களைத் தனியெழுத்துக்களாகத் தமிழ்எழுத்துக்களுடன் சேர்க்கவேண்டும் என்று தமிழ்க் கொலைஞர் முயன்றுவரத் தமிழ்மக்களுட் சிலரும் அறியாராய் அவருடன் கலந்து ஒலமிடுவது அறிவுடைமையாகுமா? மேலே நாம் காட்டிய உண்மைகளைக் கண் படைத்தார் காணட்டும்; அறிவுடையார் ஆராய்ந்து பார்க்கட்டும்.

ஒலியிலக்கண உண்மைகளையும் அவ்வொலிகளுக்கேற்ற வரிவடிவங்களை அமைத்துள்ள தமிழ்ப்பெரியார் அறிவாற்றலையும் மெச்சிய உண்மைப்பெரியார் ஒருவர் தாம் இந்தியைத் தாய் மொழியாக உடையவராக இருந்தாலும் தமது "இந்திக்கு நாகர எழுத்து வேண்டுமா அல்லது உருது எழுத்து வேண்டுமா என்று போராடுவதைப்போல அறியாமை வேறு என்ன இருக்கிறது; தமிழ் எழுத்துக்களை இந்திக்கும் கைக்கொண்டால் இந்தியைக் கற்பதும் மிகமிக எளிதாகுமே," என்று கூறினார்.

தன்பலம் தான் அறியாத அனுமாருக்கு வேறொருவர் அதனை எடுத்துக்கூறினால்தான் உடனே தெரிந்துகொள்வார் என்ப நம்மிற் சிலருக்குத் தம் மூதாதையருடைய பேரறிவுப் பெருந்திறனையும் தம் தாய்மொழியின் உலக மொழித் தன்மையையும் எவ்வளவு எடுத்துக்காட்டியும் அறியாதவர்களாக அவர்கள் விழிப்பது மிக்க வருத்தத்தைத் தருகின்றது.

**எந்த அரசாங்கம் உரிமையுடையது ?**

தமிழ்மொழி சென்னைமாகாணத்தின் ஒரு பகுதியிலும் இலங்கையிலும், பர்மாவிலும், தென்னாப்பிரிக்கா, மலேயா போன்ற இடங்களிலும் வழங்கிவரும் மொழியாகத் திகழ்கின்றதே! இதிலே திருத்தம் செய்வதற்கு இந்த நாட்டு அரசாங்கங்களுக்குத் தனித்தனி உரிமையுண்டா? அல்லது திருத்தம் இவை யாவும் ஒன்றுசேர்ந்து செய்யவேண்டிய செயலா? நமது கல்வி மந்திரியவர்கள் இதனைக் கவனிப்பார்களாக.

**நமது கல்வி மந்திரிக்கு உரிமையில்லை.**

நமது அரசியற் சட்டம் அடிப்படை உரிமைகள் (Fundamental Rights) பகுதி 3, விகு. 29, (Part III, Article 29) பிரிவு 1-ல் "Any section of the citizens residing in the territory of India or any part thereof having a **distinct language, script or culture of its own** shall have the right to conserve the same." அதாவது "இந்திய நாட்டில் அல்லது அதன் எந்தப் பகுதியில் வாழும் குடிகளில் எந்தப் பகுதியினரும் தமக்கென ஒரு தனிப்பட்ட மொழியோ,

எழுத்தோ, கலையோ கொண்டவராக இருந்தால் அவைகளைக் காத்துக்கொள்ளும் உரிமை அவர்களுக்கு உண்டு,'' என்பது.

இந்த விதியின்படி இப்பொழுதுள்ள நமது மொழியிலோ எழுத்திலோ எவ்விதமான திருத்தமும் செய்ய அரசாங்கம் உரிமையில்லாததாக இருக்கிறது. மேலும் நமது தொல்காப்பியம் முதலிய பண்டைய இலக்கணங்களிற் கண்ட விதிகளுக்கு மாருகக் கிருந்த எழுத்துக்களைப் புகுத்துதல், கண்டபடி வாயில் வந்தவாறெல்லாம் நூல்கள் எழுதுதல் முதலிய தீமைகள் நமது மொழிக்கு ஏற்படாவண்ணம் பாதுகாக்கும் கடமையை நமது அரசாங்கம் உடையதாகின்றது.

முடிவுரை

இதுவரை ஆராய்ந்தவற்ருல் என்றும் இடைவிடாது நமது தமிழ்மொழியைக் கெடுத்து அழிப்பதற்குத் தமிழ் அன்பர்கள் பல காரணங்களை மேற்போட்டுக்கொண்டு முயன்று வருகின்றனர் என்பதும், அதனைக் கண்ணுங் கருத்துமாக இருந்து அவ்வப்போது தடுத்துத் தாயைக் காக்க வேண்டியது தமிழர் கடமை என்பதும், இந்நிலையை நீடிக்க விடாமல் தடுப்பது அரசாங்கத்தின் கடமை யென்பதும் பிறவும் புலனுகின்றன.

தமிழ் மக்களே! விழித்தெழுந்து வாருங்கள். நமது தாயை, எழுத்துப் புகுத்தல் சொல்திணித்தல் முதலிய பல வகையாலும் உருக்குலைக்கப் பெருமல் நாம் அனைவரும் ஒன்று சேர்ந்து அம்மையைச் சூழநின்று கிளர்ச்சிகள் செய்து பாதுகாப்போம்.

1. எழுத்து மாற்றம் ஆகிய கெடுமதி முயற்சி நடக்க விடாமல் தடுப்போம்.

2. கண்டபடி பிற சொற்களைத் தமிழிற் கலக்க விடாமற் காப்போம்.

3. தமிழன்பர் புகுத்தித் தொல்லை விளைவித்து வருகின்ற கிருந்த எழுத்துக்களை அறவே அணுகவிடாமல் ஒழிப்போம்.

4. கலைக் களஞ்சியம் களைகள் புகுந்த களஞ்சியமாகாமலும், தமிழ்வளர்ச்சிக்கழகம் உண்மையில் தமிழை வளர்ப்பதாகவும் முயன்று வெற்றி பெறுவோம்.

5. தமிழன்பர் கெடு முயற்சியை விடுத்து உண்மையில் தமிழரே ஆகித் தமது தமிழ்த்தாயைத் தமிழ்த்தாயாகவே விளங்கும்படி செய்யுமாறு செய்வோம்.

தமிழன்பர் தமிழராக மாறுவாராக!

தமிழ் வாழ்க! தமிழ் வெல்க!

# உண்மை வெளிப்படுகின்றது

[திரு. சித்தயோகி, சாமி சுந்தரமகாலிங்கம் அவர்கள்]

" தமிழ் முரசு " தொகுதி 6. பகுதி 15, 16, 17 மூன்றும் சேர்ந்த வெளியீட்டில் "குடியாட்சித் தமிழ்" என்ற தலைப்பில் (பக்கம் 9-16) பல்கலைப்புலவர் திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரஞரவர்கள் ஒரு கட்டுரை எழுதியிருக்கின்றனர். அதனுல், "எழுத்து மாற்றக் கழகத்"தில் நடந்த உண்மைகள் வெளிப்படுகின்றன.

இகரத்தின் மேலே சுழித்தால் ஈகாரம் உண்டாகும்; இதனை இகர ஈகார உயிர்மெய்யெழுத்துக்களைக் கண்ணுலே காணுவார் எளிதில் அறிந்துகொள்வர். உதாரணம் கி, கீ, சி, சீ முதலியன. இவ்வுண்மையான இயற்கை உருவம் மாற்றப்பட்டு இப்போதுள்ள ஈகாரம் பழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டதுதான் தமிழில் நிகழ்ந்த முதல் எழுத்துமாற்றம். சம்ஃச்கிருதத்தின் கிரந்த எழுத்தே இந்த ஈகாரம்.

எழுத்து மாற்றக் கழகத்தில் சிலர் எழுத்துமாற்றம் செய்வதில் முனைந்து பலித்தமட்டும் பார்ப்போம் என்ற கருத்துடையவர் என்பதும், பலர் எழுத்து மாற்றத்தை உண்மையில் ஆதரிக்காதவராக இருந்தாலும் அச்சிலர் முகத்தை முறிக்கமாட்டாமல் இணங்கியும் இணங்காமலும் இருந்திருக்கிருர்கள் என்பதும் புலனுகின்றன.

ஊகாரத்தில் மேல் உள்ள ளகர உருவமே ஔகாரத்திலுள்ள ளகர உருவமும். ளகரம் அன்று இது; ளகரத்தைப் போன்ற சிறு எழுத்து; இதனை அறியாதார் ஒகரத்திற்குப்பின் அதே அளவிலுள்ள ளகரத்தை வைத்து ஔகாரம் ஆக்கினர். அதனுலேயே குழப்பம் விளைகிறது. இதனை உணராது மாற்றக் கழகம் ளகரத்திற்குக் கால் வாங்கவேண்டுமென்பது தவறு. ஒகரத்தின் பக்கத்தில் அதனினும் சிறிய (உரு) ளகரத்தை வைத்தாற்போதும்.

" ணுகாரத்தை ணா என்று எழுதினுல் ணகரம்போலாகி மயக்கம் தரும்; ஊை என்பதை னை என எழுதினுல் இரண்டு

னகரம்போல மயக்கும்; இங்ஙனமாய குழப்பம் நேராமலிருக்கவே ணு, ரு, னு எனவும் ணை, லை, ளை, னை எனவும் எழுதப்பெற்றன," என்று மெய்யான காரணம் கூறுகின்றனர் நம் மீனாட்சிசுந்தரனார். அதனை அடுத்து அவர், "இக்காலம் குழப்பம் நேராது," என்பது வியப்பே! குழப்பம் எப்படி நேராது என்பது விளக்கப்பெறவில்லை.

மாற்றக் கழகத்தின் பலர் சொல்லுக்கு இணங்க ஈகாரத்தைப் பண்டைய இயற்கை உருவமாக மாற்ற இணங்கினபோதிலும் இகர ஈகார உயிர்மெய் உருவங்களையெல்லாம் இருந்த உருவத்தில் மாற்ற முனைந்தனர். "இப்போதுள்ள இகர ஈகார உயிர்மெய் உருவங்களே ஈகாரமாற்றத்தைக் காட்டிக்கொடுத்தன; ஆதலின் அவைகளையே மாற்றி ஒழிப்போம் என முற்பட்டனர் அச்சிலர். அப்பலரும் ஒருவாறு அதற்கு இசைந்தவர் போலத் தென்பட்டனர். உடனே அச்சிலர் உகர ஊகாரங்களையும் கிரந்த உருவமாக்கவேண்டும் என்று கூறினர். நமது மீனாட்சிசுந்தரனாரவர்கள் "இகர ஈகார மாற்றம் செய்யவேண்டுமென்று முடிவானவுடன் உகர ஊகார மாற்றத்தையும் செய்ய வேண்டும் என்று ஒருசிலர் மன்றாடினர். இவ்வாறு செய்வது தமிழை முழுதும் வடமொழி கிரந்தவடிவில் அமைப்பதுபோலாம் எனப் பலர் உள்ளம் உருகி நைந்தனர். அவர்கள் கூறுவதனை ஒப்புக் கொள்ளாதவரும் அவர்கள் உருக்கத்தினை மறக்கமுடியாது. இன்று தமிழ்நாடு இருக்கும் நிலையில் இந்தப் பூசலில் இறங்குவது "குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வதாக முடியும்," என்று குறித்ததோடு நிற்காமல், "இகர ஈகாரச் சீர்திருத்தத்தினைப் படித்துப் பழகக் காலமும்வேண்டும்; உகர ஊகாரச் சீர்திருத்தமும் உடன்வந்திருந்தால் சீர்திருந்திய எழுத்துக்களைப் படிப்பது அருமையில் அருமையாகி முடிந்திருக்கும், எதிர்ப்பும் வலுப்பெற்றிருக்கும்," என்றும் தம் உண்மைக்கருத்தினை வெளியிடுகின்றனர். ஆதலின் இவ்வெழுத்து மாற்ற முயற்சியில் ஈடுபட்டு மன்றாடிய சிலர் கருத்து தமிழ்எழுத்துக்களைக் கிரந்த எழுத்துக்களாக்கிச் சிதைக்கவேண்டுமென்பதுதான் என்பது வெளிப்படை. அச்சிலர் மிகவும் செல்வாக்குப்பெற்ற சிலர்; அவர்களுடைய சூழ்ச்சியை முற்றிலும் உணர்ந்த பலர், "இவ்வாறு செய்வது தமிழை வடமொழிக் கிரந்த வடிவில் அமைப்பதுபோலாம்," என உள்ளம் உருகி நைந்தனரே அன்றி வேறு செயல் இல்லாதிருந்திருக்கின்றனர். அதனாலேயே அவர்கள் இகர ஈகார மாற்றத்திற்கு இசைந்ததுபோல அச்சிலரைக் கொண்டு 'இப்போதே அம்மாற்றத்தைச் செய்யவேண்டும்,' என்று அரசாங்கத்துக்கு எழுதச் செய்திருக்கின்றனர். ஆனால், அச்சிலர் உகர ஊகார

மாற்றத்தை வற்புறுத்தாமல் விட்டதற்குக் காரணம் நம் மீனுட்சிசுந்தரனுர் கூறுகிறபடி "எதிர்ப்பு வலுப்பெற்றுவிடும்; இன்று தமிழ்நாடு இருக்கும் நிலையில் இந்தப் பூசலில் இறங்குவது குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வதாக முடியும்," என்ற அச்சமே.

"எழுத்து மாற்றம் என்பது தமிழில்தான் புதிதாக இந்தியாவில் எழுகின்றது. தமிழனது தனிப்பெருமை அது. மாற்றக்கூடும்! என்ற மனப்பான்மை வந்ததே இங்குள்ள சிறப்பு; இது வாழ்க!" என்று நமது மீனுட்சிசுந்தரனுர் கூறுகின்றுர். ஏன்? உலகிலேயே என்று சொன்னுல் வாய் வலிக்கவாசெய்யும்? உலகத்திலே வேறு எம்மொழியாளரும் ஒருவரோடொருவர் காணும்போது அவரவர் தாய்மொழியிலேயே பேசி அளவளாவுவர்; உற்றுருக்கும் நண்பினருக்கும் கடிதங்கள் தம் தாய்மொழியிலேயே எழுதியனுப்புவர்; ஆனுல், உலகத்திலே முதன்முதலாகத் தோன்றிய மக்களின் நேர் இனத்தவராகிய தமிழர் உலகத் தாய்மொழியாகிய தமிழ்மொழியே தமது தாய்மொழியாக இருக்க, அதனை வாய்குளிரப் பேசியும் கைகுளிர எழுதியும் மகிழாமல், புறமொழியிலேயே பேசி எழுதுவதைத் தமக்கு உரிய தனிப்பெருமையாகக் கருதி மகிழ்வார்கள். "தமிழிலே பேசத்தெரியாது; ஆங்கிலத்திலேதான் பேசுவேன்," என்று பெரிய பெரிய பட்டம் பெற்றவர்கள் பெரும் கூட்டங்களிலே பெருமைபாராட்டிய காலமும் இருந்தது. தங்கள் நாட்டுத் தட்ப வெப்ப நிலைக்கேற்பப் பண்பட்ட முன்னேர் நாகரிக முறைகளையெல்லாம் கைவிட்டுப் புதிய மேலைநாட்டு நடைஉடை தலைமுறைகளையெல்லாம் கைக்கொண்டு தருக்கிநிற்பர் இக்காலத் தமிழர். "தனித் தெலுங்கு மாகாணம் அமைக்கவேண்டும்; சென்னையையும் செங்கற்பட்டு மாவட்டத்தையும் கைப்பற்ற வேண்டும்," என்று தெலுங்கர் அனைவரும் பெருங்கிளர்ச்சி செய்ய, மாயோகியர்போல, "இராமன் ஆண்டால் என்ன, இராவணன் ஆண்டால் என்ன?" என்று வாளா தூங்கி இருக்கும் தனிப்பெருமையினர் தமிழர்! விரிக்கிற் பெருகும். இங்ஙனமாகவே உலகத்தினர் அனைவரும் செய்ய எண்ணுத எழுத்து மாற்றத்தைச் செய்து தமிழை அழிக்கவேண்டுமென்று சிலர் கச்சை கட்டிக்கொண்டு நிற்க, "மண்டு எரிதான் வாய்மடுப்பினும் கண்துயிலும் மாசுணம்," போல இன்று இருக்கும் தனிப்பெருமை படைத்தனர் பேதைத் தமிழர். க்ஷ, ஷ, ஸ, ஹ, ஜ வைச் சேர்த்துப் பாடங்கள் எழுதினுல் அல்லாமல் முதற்பாடப் புத்தகத்தை ஏற்றுக்கொள்ளமாட்டோம்," என்று பாடப்புத்தக ஏற்புக் கழகத்தார் (Text-Book Committee) கூற, மானத்

தைப் பெரிதென்று பாராட்டித் "தமிழ்ப்பாடப்புத்தகத்துக்கும் இந்தக் கிரந்த எழுத்துக்களுக்கும் என்ன தொடர்பு?" என்று வாதிட்டு உண்மையை நிலைநாட்ட வலுவில்லாமல் அவ்வாணைப் படியே நடந்து வயிறு வளர்க்கும் தனிப்பெருமையினர் இக் காலத் தமிழர். "நெற்றிக்கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே," என்று வாதாடியதாகக் கூறும் தனித் தமிழ்ப்பெருமை எங்கோ ஓடிப் பறந்துவிட்டதே! "இவர்கள் விழித்தெழுந்து தமது தமிழ்த்தாயை உருக்குலைவு செய்யப்பெறுமற் பாதுகாத்துத் தனித்தமிழ் நாட்டாட்சி பெற்றுத் திகழ்ந்தோங்கும் நற்காலம் எப்போது வருமோ? தமிழ்த்தாயே," என யாம் ஏங்காநிற்கின்றேம்.

நம் மீனாட்சி சுந்தரனாரோ, "மேலும் மாற்றங்கள் வரவில்லையே என யானும் ஏங்குகின்றேன்; அதனைப் பின்னர்த் தெரிவிக்கிறேன்," என ஏங்கா நிற்பர். இஃது எமக்கு ஒரு பண்டைய நிகழ்ச்சியை நினைப்பூட்டுகின்றது. முன்னர் உருசியா (Russia) வில் பெரும்பஞ்சம் வந்து நாடு அல்லோல கல்லோலப்பட்டுப் போயிருந்தது; அப்போது பெரியார் இலெனின், "இன்னும் ஒரு பெரும் பஞ்சம் வந்தாலல்லவோ நலம் உண்டாகும்," என ஏங்கினார். அவர் நண்பர் விளக்கம் வினவ, இலெனின் "பஞ்சத்தினாலே விளையும் துன்பங்களினால் மோதுண்ணும்போதுதான் மக்களுக்கு நல்லறிவும் உணர்ச்சியும் உண்டாகும்," என்று கூறினார். அடுத்துப் பஞ்சமும் வந்தது; உடனே இலெனின் உருசிய மக்களுக்குத் தலைமைதாங்கி அவர்களைக் கொடுமைகளினின்றும் விடுவித்து நலம் கண்டார். அங்ஙனமே, "தமிழ்மொழிக்கு இத்துணை மாற்றங்கள் வந்தபோதிலும், தமிழ்மக்களுக்கு நல்லறிவும், தமது தாயைப் பாதுகாக்கவேண்டும் என்னும் நல்லுணர்ச்சியும் வரவில்லையே; இன்னும் பல புரட்சிகரமான மாற்றங்கள் வந்தாலாவது நலம் விளையுமா? அப்போதாவது தமது தாயைக் காக்க முன் வருவாரா தமிழ்மக்கள்?" என்று நம் மீனாட்சிசுந்தரனார் ஏங்குகின்றனர்.

ஒரு சிறந்த தமிழ்ப் பெரியார், "f என்ற ஒலியைக் காட்டும் எழுத்து தமிழில் இல்லையே. அதனால் f என்ற எழுத்தை நாம் சேர்த்துக்கொள்வோம்," என்று சொல்லியதோடு அங்ஙனமே தமது பத்திரிகையில் எழுதவும் தொடங்கினார். ஒரு நண்பர் அவரிடம் "இது (f) ஆங்கில எழுத்தாயிற்றே!" என்று கேட்டார். அதற்கு அப்பெரியார், "ஜ, க்ஷ, ஸ, ஷ, ஹ தமிழ் எழுத்துக்களா? அவை வடமொழிக் கிரந்த எழுத்துக்களல்லவா? அவற்றைத் தம் தாய்மொழியாம் தமிழ்மொழியோடு சீரையை

யும் மயிரையும் கலந்து வைப்பதுபோலக் கலந்து எழுதும் தமிழன் f என்ற ஆங்கில எழுத்தைமட்டுமா? வேறு பிரெஞ்சு முதலிய எழுத்துக்களையும் கூடச் சேர்த்துக்கொண்டு, 'பார்த்தீர்களா? என் பரந்த நோக்கத்தை,' என்று பெருமை பாராட்டி மகிழ்ச்சி பூப்பான்! தமிழனது தனிப்பெருமை இது! இப்படி எழுதினாலாவது உணர்ச்சி உண்டாகாதா என்றுதான் f எழுத்தைச் சேர்த்தேன். f மட்டுமா? எந்த ஒலியையும் தமிழ் வரிவடிவில் எழுதிக் காட்டலாமே! தம் மூதாதையருடைய முதிர்ந்த அறிவுச்சிறப்பை ஆராய்ந்து பார்க்கும்அறிவும் பொறுமையும் இல்லாமல் தான்தான் உலகில் ஒப்பற்ற புலவன் என்று தருக்கி நிற்பவன் இன்றையத் தமிழன்!'' என்றுகூறி அன்றுமுதல் f ஒலியை ஃப் என்ற தமிழ் எழுத்துக்களினால் எழுதி வருகின்றார்.

"வரிஅச்சு (Linotype) முறையை எளிதாக்க எழுத்து மாற்றம் வேண்டும்,'' என்று எழுத்து மாற்றத்தார் கூறுகின்றனர். இஃது உண்மையன்று. வெறும் போலிக்காரணமே. சில ஆண்டுகளுக்கு முன்னர் இந்து என்னும் ஆங்கிலப் பத்திரிகையில்கூட வெளிவராத அன்றன்றையப் பின் நிகழ்ச்சி முடிவுகள் ஒரு தமிழ்ப்பத்திரிகையில் அச்சிட்டு வெளிவந்ததை யாம் அறிவோம். இப்போதுள்ள அச்சு முறையைக் காட்டிலும் மிகமிக வசதிக் குறைவானது வரிஅச்சு முறை; பிழையான ஓர் எழுத்தை எடுத்துவிட்டுச் சரியான எழுத்தை வைப்பதற்கு எவ்வளவு நேரம் செல்லுமோ அவ்வளவு நேரத்தைவிட மிகுதியான நேரமே வரியச்சில் பிழையான எழுத்துள்ள வரியையே எடுத்துவிட்டு மறுபடி புதுவரியை முழுதும் அச்சுக்கோத்து ஆக்குதற்கு வேண்டும். இதனால் நேரம், உழைப்பு, தாள் எவ்வளவு வீணாகும்? இப்போது தமிழில் கையச்சுப் பொறி (Type Writer) இருக்கிறது; அதைப்போன்ற வரியச்சுப் பொறி அமைப்பதில் என்ன தொல்லை விளையும்? முன்னரே வரியச்சுப் பொறியொன்று தமிழில் இருப்பதும் அதனால் எழுத்துமாற்றம் ஒன்றும் இல்லாமலே தமிழ்நூல்கள் அச்சிடப்பெறுவதும் இவர்கள் அறிதல்வேண்டும். மேலும் நம் மீனாட்சிசுந்தரனார், "அச்சு எந்திரத் தொழிலாளரும் இந்த உகர ஊகாரச் சீர்திருத்தம் இன்றியே எளிதில் எந்திரத்தை அமைத்துவிடலாம் என்று உறுதி கூறினர்,'' என்று கூறுகின்றனர். உகர ஊகாரத் திருத்தம் இன்றியே பொறியமைக்க வல்லமையுடைய தொழிலாளர் இகர ஈகாரத் திருத்தமும் இல்லாமல் அமைப்பதற்கு வல்லமை யில்லாதவராகவா இருப்பர்? மேலும் காலுக்குச் செருப்பா, செருப்புக்குக் காலா? எழுத்துக்களுக்கு ஏற்றாற்போலவே எந்திரம் அமைத்

தல்வேண்டும். இந்நாட்டிலுள்ளவராலே வழிதெரிய முடியா தாயின் அமெரிக்கா, பிரான்சு, இங்கிலாந்துபோன்ற பிறநாட்டு வல்லாரிடம் கலந்து தக்க எந்திரம் அமைப்பதே அறிவுடையார் செயலாகும்.

தமிழ்மக்களை விழிப்படையச் செய்த எழுத்துத் திருத்தக் கழகத்தில் இருந்த தமிழ்ப் பெரியார் பல்கலைப் புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களுக்கும், பேராசிரியர் சேதுப் பிள்ளையவர் களுக்கும், டாக்டர் வரதராசனார் அவர்களுக்கும் தமிழ்மக்கள் நன்றி என்றும் உரியது. இக் கட்டுரையை நம் மீனாட்சி சுந் தரனாருடைய முடிப்புரையோடு நாமும் முடிப்போம். அது வருமாறு :—

**“எவ்வளவோ மாற்றம் வேண்டியிருக்கலாம். உரோமன் எழுத்தி லேயே எழுதி விடலாம். ஆனால், தமிழ் மிகப் பழையமொழி என்பதனை மறக்க முடியாது. பழைமையை அழிப்பதில் ஏன் இந்த விறுவிறுப்பு? தமிழ் எழுத்து கண்ணைக் குத்துகிறதா? கொலை செய்கிறதா? முதலா ளிக்குத் துணை போகிறதா நம் எழுத்து? இன்று நம் நாட்டில் எழுதப் படிக்கத் தெரிந்தவர் நூற்றுக்குப் பத்துப் பதினைந்து பேரே. விரை வான எழுத்து மாற்றமோ உரோமன் எழுத்தோ வந்தால் என்ன ஆகும்? இந்தப் பத்துப் பதினைந்து பேரும் எழுதப் படிக்கத் தெரியாதவர்களாக மாறி விடுவர். ஒளியை இருட்டாக்குவதா பெருமை?”**

இவ்வாராய்ச்சியினால், இப்போது நமது சென்னை அரசாங் கம் செய்யத் துணிந்திருக்கும் தமிழ்எழுத்து மாற்றம் தமிழ் மொழியின் பண்பாட்டையும் மரபினையும் கெடுத்து அதனை வட மொழிக் கிரந்தமாக்கும் முயற்சியே என்பதும், அரசாங்கம் அமைத்த கழகத்திலிருந்த பேரறிஞர் பெரும்பாலோருக்கு இம் முயற்சி உடன்பாடன்று என்பதும் வெட்டவெளிச்ச மாகின் றமை காண்க. நமது இந்தியநாட்டு அரசியற் சட்டம் பிரிவு 29 (1)ன்படி அரசாங்கம் இம்முயற்சியில் ஈடுபடுவதற்கு முற்றி லும் உரிமையற்றது; மேலும் தமிழ்மொழியின் பண்பாட்டுக்கும் மரபுக்கும் கேடு விளையுமாறு எவர் முயன்றாலும் தடுத்துப் பண்பாட்டினையும் மரபினையும் பாதுகாத்து உதவும் கடமையே உடையது என்ற உண்மையை நமது அரசாங்கத்துக்கு அன்புடன் எடுத்துக் காட்டி இக் கட்டுரையை முடிக்கின்றோம்.

# திருக்கோவையார்*

[வித்துவான், பாலூர், D. கண்ணப்ப முதலியார்]

### தோற்றுவாய்

தமிழ் மக்கள் தம் வாழ்வை இருகூருக வகுத்துக்கொண்டனர். அவையே அகவாழ்வு புறவாழ்வு என்பன. புறவாழ்வில் அறம் பொருள், வீட்டின் பாகுபாடுகள் விளக்கப்பெறும். அக வாழ்வில் இன்பப்பகுதியே இயம்பப்படும், அகம் எனும் சொல்லே இன்பம் என்னும் பொருள் தந்து நிற்குமாயின் வேறு கூறுவானேன்.

### கோவையின் இலக்கணம்

அகமாகிய இன்பத்தை விளக்க எழுந்த இலக்கணங்களும் இலக்கியங்களும் பலவாகும். அவற்றுள் கோவை என்னும் நூலுக்கும் இடனுண்டு. தமிழ்மொழியில் உள்ள தொண்ணூற்ருறு வகையான பிரபந்தங்களுள் ஒன்று கோவையென்பது. இக்கோவை அகப்பொருள் பற்றிக் கூறுவதனுல் இது அகப்பொருள் கோவை என்றே கூறப்பெறும். இதனை எவ்வாறு பாடுதல்வேண்டும் என்பதை இலக்கணமுகத்தான் அறிய வேண்டின்,

"முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் முகந்து
களவு கற்பெனும் வரைவுடைத் தாகி
நலனுறு கலித்துறை நானூ ருக
ஆறிரண் டுறுப்பும் ஊறின்றி விளங்கக்
கூறுவ தகப்பொருள் கோவை ஆகும்."

என்ற இலக்கணவிளக்க நூற்பாவால் நன்கு அறியலாம்.

### கோவையால் அறியக்கிடப்பன

கோவை நூல்களிலிருந்து தமிழ்நாட்டுத் திருமணமுறையை ஒருவாறு உணரலாம். கோவையின் பொருட் சுருக்கத்தைக் கூறப்புகுந்தால் ஒருவன் தன் தோழனேடு சோலைவழியே வருவான். அவ்வாறே ஒருத்தி தன் தோழியோடு சோலையில் பூக் கொய்யவும் புனல் விளையாடவும் வருவள். அவள் தனித்து இருக்கையில் தலைமகன் கண்டு காதலிப்பான். இருவருடைய மனமும் இயைந்து ஒன்றுபடும். இந்த நிகழ்ச்சி சிலநாள் பிறர்

---

* பழநி ஒன்பதாவது திருமுறை மாநாட்டின்போது (17-5-1951) சொற்பொழிவாற்றிய பொருளின் சுருக்கம்.

அறியாமல் நிகழப் பின் தோழி அறிவாள்.. அவள் துணையால் சிலநாள் தலைவன் தலைவியர் இன்பம் நுகர்வர். தலைவியின் வேறுபாட்டை அறிந்த தலைவியின் உறவினர் தோழியை வினவத் தோழி தலைவிக்கு ஏற்பட்ட காதல் நிகழ்ச்சியைப் புனல்தரு புணர்ச்சியாலும், பூத்தரு புணர்ச்சியாலும், களிறுதரு புணர்ச்சியாலும் உறவினர்க்கு உணர்த்துவள். அதனால் சுற்றத்தினர் தலைவியை வெளியில் ஏகாதவாறு தடுப்பர். இத்தடையால் தலைவன் தலைவியைத் தோழியின் துணையால் தன்னூருக்கு அழைத்துச்செல்வான். அங்கு மணத்தை முடிப்பன். மீண்டும் மணமகள் இல்லம் திரும்புவன். பெற்றோர் அவனுக்கே அவளை ஈந்துவிடுவர். இருவரும் இல்லறத்தை இனிது நடத்துவர். மக்கட்பேற்றை மாணுறப்பெற்று இன்பம் நுகர்வர்.

இவற்றிற்கு இடையே பல நிகழ்ச்சிகள் நிகழும். அவை சொல்லப்புகின் பெருகும் என்று இந்த அளவில் சுருக்கப்பட்டது. இன்னோரன்ன நிகழ்ச்சிகளைக் கோவையாகச் சொல்லப் படுதலின் இது கோவை என்னும் பெயரைப்பெற்றது. இதுகாறும் கூறிப்போந்தவை கோவையின் பொதுத்தன்மைகளாகும். இனி நாம் எடுத்துக்கொண்ட பொருளாகிய திருக்கோவை யாரைப்பற்றிக் கூறுவோமாக.

**திருக்கோவையார் மாண்பு**

தமிழில் உள்ள கோவைகள் யாவும் யார்மீது பாடப்படுகிறதோ அவர்கள் பெயரையொட்டியும், எத்தலத்தின்மீது பாடப்படுகிறதோ அத்தலத்தின் பெயரைச் சார்ந்தும் வழங்கப் பெறும். முறையே தஞ்சைவாணன் கோவை, திருவாரூர்க் கோவை என்னும் பெயர்களால் இவ்வுண்மையை நன்கு உணரலாம். இவ்வாறே ஏனைய கோவை நூல்கள் விளங்குவதைக் காணலாம். இவ்வாறு பாட்டுடைத்தலைவன் பெயரையோ தலத்தின் பெயரையோ சார்த்தி வழங்கப்பெறுமல் 'கோவை' என்று கூறினுல் இன்ன கோவை என்றுணரப்பெறுமல் திகைக்க நேரிடும். ஆனல், திருக்கோவையார் என்று கூறியதும் நமக்கு வேறு கோவை நூல்களில் எண்ணம் செல்லாமல் திருச்சிற்றம்பலக்கோவையின்மீதே செல்லும் என்பதை எவரும் மறுக்க இயலாது. இதன் ஈடும் எடுப்பும் இல்லாப் பெருமையை முன்னே திரு என்னும் சொல்லையும் பின்னே ஆர் என்னும் உயர்வு சிறப்புவிகுதியையும் புணர்த்திக் கூறியதினின்றும் நன்கு உணரலாம். திரு என்னும் சொல்லுக்குப் பேராசிரியர் 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' என்று பொருள் கூறியதற்கேற்ப இக்கோவையும் விளங்குதலின் 'திருக்கோவையார்' என்று இலங்குவதாயிற்று.

இந்நூலின் சிறப்பைப் பலபடப் புனைந்து கூறியுள்ளனர் புலவர் பெருமக்கள். தமிழில் ஒருவன் நல்ல புலமைபெற்றுத் திகழவேண்டின் மூன்று நூல்களைப் படித்துவிடின் போதுமானது என்பதை இலக்கணக்கொத்து ஆசிரியர் சுவாமிநாததேசிகர் கூறும்போது,

> "பல்கால் பழகினும் தெரியா உளவேல்
> தொல்காப் பியம்திரு வள்ளுவர் கோவையார்
> மூன்றினும் முழங்கும்"

என்று கூறிப் போந்தனர். தொல்காப்பியம் திருக்குறளோடு ஒருங்குவைத்து எண்ணப்படும் நூல் இக்கோவையார் என்று இலக்கணப் பேர்ஆசிரியர் இயம்பின், இதற்குமேல் இதன் மாண்பை இயம்பவும் வேண்டுமோ.

திருமுறை வகுத்த பேராசிரியராம் நம்பியாண்டார் நம்பிகள்,

> "..................................திருச் சிற்றம்புலப்
> பொருளார் தருதிருக் கோவைகண் டேயும்மற் றப்பொருளைத்
> தெருளாத உள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பிப்பரே."

என்று இதில் அடங்கிய பொருட் சிறப்பை நனிவியந்து கூறியுள்ளார்.

செவ்வந்திப்புராணம் திருவெண்காட்டுப்புராணம் திருக்கோவையார் பாடிய ஆசிரியரைப் புகழ்கையில், முறையே 'திருக்கோவை, நானூறும் அமுதூற மொழிந்தருளும் நாயகனே,' என்றும், 'சிற்றம்பலக்கோவைத் தேன்சொரியும் செம்முகிலே,' என்றும் கூறி நூலின் இன்சுவையை எடுத்துக்காட்டுவாராயினர்.

திருக்கோவையாரின் சொல்லின்பத்தையும் பொருள் இன்பத்தையும் ஒருங்கே துய்த்து இன்புற விழைந்த ஒரு புலவர் தாம் வழிபடும் கடவுளான விநாயகப்பெருமானை நோக்கி,

> "எண்ணிறைந்த தில்லை எழுகோ புரந்திகழக்
> கண்ணிறைந்து நின்றருளும் கற்பகமே—கண்ணியசீர்த்
> தேனூறு செஞ்சொல் திருக்கோவை என்கின்ற
> நானூறும் என்மனத்தே நல்கு"

என்று வேண்டுவார் ஆயினர்.

திருக்கோவையாருக்கு எந்நூலுக்கும் இல்லாத தனிச் சிறப்பு ஒன்று உண்டு. அஃது, இறைவனே இதைத் தம்கையால் எழுதிய சிறப்பாகும். இறைவனே எழுதினர் என்பதை அழகிய திருச்சிற்றம்பலம் உடையார் அவர் வாக்கிற் கலந்திருந்து

அருமைத் திருக்கையால் எழுதினர் என்று இலக்கணக்கொத்து உரையால் உணரலாம். 'பிறைமுடித்தபிரான் எழுதக் கோவை' என்பது மச்சபுராணமாகும். தான் எழுதுதற்கேபோலும் 'இறைவன் பாவைபாடின வாயால் ஒரு கோவை பாடுக' என்றனன்.

இன்னோரன்ன சிறப்பியல்பு இந்நூலுக்கு இல்லையானால்,

"ஆரணங் காண்என்பர் அந்தணர் யோகியர் ஆகமத்தின்
காரணங் காண்என்பர் காமுகர் காமநன் னூலதென்பர்
ஏரணங் காண்என்பர் எண்ணர் எழுத்தென்பர் இன்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே"

என்று ஒரு புலவர் இம்முறையில் அறுதியிட்டு உறுதியாகக் கூறியிரார்.

**திருக்கோவையார் பாடிய ஆசிரியர் யார்?**

இந்த வினவும் எழுதற்கு இடனுண்டா என்று சிலர் ஐயுறலாம். ஆம் எழுதற்கு இடனுண்டு. இவ்வையம் இரண்டொரு காரணங்களால் எழுவதாகும். தொன்றுதொட்டுப் பரம்பரையாக எவரும் கூறிக்கொண்டு வருவது திருக்கோவையாரைப்பாடியவர் திருவாசகம் பாடிய மாணிக்கவாசகர் என்பதாகும். நூல் வழக்கும் இதனை நன்கனம் வலியுறுத்தும்.

"பிறைமுடித்த பிரான்எழுதக் கோவைதிரு
வாசகப்பேர் பிறங்கு பாடல்
மறைவகுத்த வாதவூர் மாணிக்க
வாசகர்தாள் மனத்துள் வைப்பாம்"

என்று மச்ச புராணமும்,

"தேனூறும் வாசகங்கள் அறுநூறும் திருக்கோவை
நானூறும் அமுதூற மொழிந்தருளும் நாயகனை
வானூறும் கங்கைநிகர் மாணிக்க வாசகனை
யானூறு படாதவகை இருபோதும் இறைஞ்சிடுவேன்"

என்று செவ்வந்திப் புராணமும்,

"சிற்றம் பலக்கோவைத் தேன்சொரியும் செம்முகிலை
மற்றொப் பிலாததிரு வாசகத்தின் வாரிதியைக்
கற்றைச் சடையான் கருத்துருக்கும் காதலனைக்
கொற்றத் திருவாத வூரனைக்கை கூப்புதுமே."

என்று திருவெண்காட்டுப் புராணமும், மாணிக்கவாசகர் அறிவால் சிவனே என்பது திண்ணம். அன்றியும் அழகிய திருச்

சிற்றம்பலமுடையார் அவர் வாக்கில் கலந்திருந்து அருமைத் திருக்கையால் எழுதினார் என்று இலக்கணக்கொத்து உரையும், 'பாவை பாடின வாயால் கோவை பாடுக,' என்று இறைவனே கேட்டுக்கொண்டதாகக் கூறும் செவிமரபுத்தொடரும் அறிவிப்பதினின்றும் அறியலாம். இக்காரணங்களால் திருவாசகம் பாடிய மாணிக்கவாசகரே திருக்கோவையாரைப் பாடினார் என்பதை அறிந்தோம். ஆனால், இவை அனைத்தும் புறச்சான்றுகளாகும். அகச்சான்றுகளாலும் இக் கருத்தை நன்கு வலியுறுத்தலாம். அதனையும் ஈண்டு நோக்குவோமாக.

திருவாசகம் மாணிக்கவாசகரால் பாடப்பட்டது என்பதில் எவர்க்கும் ஐயம் எழாது என்று எண்ணுகிறேன். அத் திருவாசகத்தில் காணும் சொல்லும், பொருளும், திருக்கோவையாரில் ஆங்காங்குச் சிதறிக் கிடக்கின்றமையின், அவற்றை எடுத்துக் காட்டின் மணிமொழியாரே திருக்கோவையார்க்கும் ஆசிரியர் என்பது வெள்ளிடைமலை என விளங்கும் என்க. திருக்கோவையாரில், வழிவினாதல் என்னும் துறைகூறும் பகுதியில்,

> "சிலம்பணி கொண்டசெஞ் சீறடி பாங்கன்தன் சீரடியார்
> குலம்பணி கொள்ளஎனைக் கொடுத்தோன்"

என்னும் தொடர் திருவாசகத்தில், திருப்பூவல்லிப் பகுதியில்,

> "வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்
> திணங்கத்தன் சீர்அடியார் கூட்டமும் வைத்தெம் பெருமான்"

என்னும் அடியை நினைவுபடுத்துகிறது.

> "பொருளா எனைப்புகுந் தாண்டு புரந்தரன் மாலயன்பால்
> இருளாய் இருக்கும் ஒளிநின்ற சிற்றம் பலமெனலாம்
> சுருளார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் துடியிடையீர்
> அருளா தொழியின் ஒழியா தழியும்என் ஆருயிரே"

என்னும் ஆற்றுதுரைத்தல் துறையை உணர்த்தும் கோவையார்ப் பாடல்.

> "அருளா தொழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பா ரார்இங்குப்
> பொருளா என்னைப் புகுந்தாண்ட பொன்னே பொன்னம் பலக்கூத்தா
> மருளார் மனத்தோ டுனைப்பிரிந்து வருந்து வேனை வாஎன்றுன்
> தெருளார் கூட்டம் காட்டாயேல் செத்தே போனால் சிரியாரோ"

என்னும் திருவாசகக் கோயில் மூத்த திருப்பதிகத்தின் சொல்லையும் பொருளையும் தழுவி நிற்பதை உணரலாம்.

> "மைத்தழை யாநின்ற மாமிடற் றம்பல வன்கழற்கே
> மெய்த்தழை யாநின்ற அன்பினர் போல விதிர்விதிர்த்து."

என்பது திருக்கோவையாரில் இரக்கத்தொடு மறுத்தல் என்னும் துறையைச் சார்ந்த பாடல். இதில் விதிர்விதிர்த்து என்று பெய்யப்பட்ட தொடர்,

"மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்துன் விரையார் கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி உள்ளம்"

என்னும் திருவாசகத் திருச்சதக முதற்பாட்டில் மிளிர்வதைக் காண்க.

மாணிக்கவாசகர் தம்மை நாயினும் கடைப்பட்டவன் என்று அடிக்கடி கூறிக்கொள்வதைத் திருவாசகத்தில் பல இடங்களில் காணலாம்.

'நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்கு' —சிவபுராணம்
'கடையனுய நாயினேன் ஆதலையும் நோக்கி' —திருச்சதகம், சுட்டறுத்தல்.
'நாயிலாகிய குலத்தினும் கடைப்படும் என்னை' —திருச்சதகம், ஆத்மசுத்தி.
'சீறிலாத நெஞ்சுடைய நாயினேன்' —திருச்சதகம், ஆனந்தாதீதம்
'நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை' —திருக்கோத்தும்பி

இந்தக் கருத்தைக் கருத்தில் கொண்டேதான் திருக்கோவையாரிலும்,

"நாய்வயின் உள்ள குணமும் இல்லேனைநற் றொண்டு கொண்ட
தீவயின் மேனியன்"

என்று ஆசிரியர் மொழிவார் ஆனர். இவ்வாணித்தரமான அகச்சான்றுகளால் மாணிக்கவாசகரே திருக்கோவையாரின் ஆசிரியர் என்பது உள்ளங்கைநெல்லிக்கனிபோல விளங்குகிறது.

இங்ஙனம் அசைக்கஒண்ணு அகப்புறச் சான்றுகள் இருக்க ஆசிரியர் யார் என்பதைப்பற்றி ஆசங்கை நிகழ்வானேன் எனின், அதனையும் இங்கு அறிவோமாக. நம்பியாண்டார் நம்பிகள்,

"திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவை."

என்று குறித்துள்ளார். இதில் மாணிக்கவாசகர் செய் திருச்சிற்றம்பலப்பொருளார் தருதிருக்கோவை என்றிராமல்சிவபாத்தியன் செய்கோவை என்றிருத்தலின் திருவாதவூரில் வாழ்ந்த சிவபாத்தியர் என்பவரால் பாடப்பட்டதாகும் என்று கருதுகின்றனர் சிலர். நம்பியாண்டார் நம்பிகள் சிவபாத்தியன் என்னும் சொல்லைச் சிவனுக்குப் பாத்தியமாக உள்ள மாணிக்கவாசகர் என்றே பொருள் படுமாறு பாடியிருப்பதாகக் கருதுவோமானல் இவ்வையம் எழ ஏதுவே இல்லாமற்போகும்.

மற்றொரு காரணங்காட்டியும் திருக்கோவையார் மாணிக்க வாசகர் பாடியதன்று என்பதை நிலைநிறுத்துவர் சிலர். அஃதாவது, மாணிக்கவாசகர் பாடிய எட்டாந் திருமுறையாகிய திருவாசகத்தோடு இதையும் ஒருங்குவைத்துத் திருமுறையாகக் கூறாமையே ஆகும். இதற்குச் சான்றாகத் திருமுறைகண்ட புராணப்பாடலாகிய,

"ஆகவளர் திருமுறைஎழ் அருள்திருவா சகம்ஒன்று"

என்னும் அடியைக்காட்டிச் சாதிப்பர்.

திருமுறை வகுப்பு முறையில் பல தடைவிடைகள் ஆராய்ச்சியாளர் இடையே உலவி வருவதால், எட்டாந் திருமுறையில் திருக்கோவையாரை இணைக்காததை நாம் இங்கு ஆராயவேண்டுவதில்லை. அவ்வாராய்ச்சி தனிப்பட்டது. இதனால் திருக்கோவையார் மணிமொழியாரால் பாடப்பட்டதன்று என்று சொல்லிவிட முடியாது.

மற்றும் சிலர் பேர்இன்ப நிலையில் திளைத்துத் தேக்கெறியும் மணிமொழியார் சிற்றின்பநிலையில் திருக்கோவையாரைப் பாடுவரோ? பாடார் ஆதலின் வேறு யாரோதாம் பாடி இருக்க வேண்டுமெனச் சாதிக்க முன்வருவர். அவர்கட்கு,

"பெற்றசிற் றின்பமே பேரின்ப மாய்அங்கே
முற்றி வரும்பரி சுந்தீபற
முளையாது மாயைஎன் றுந்தீபற"

என்னும் திருவுந்தியார் பாடற்பொருளை நன்கு சிந்திக்க விட்டு விடுகின்றேன். அதன்பின் அவர்களே பேரின்பநிலையில் இருந்தவரும் சிற்றின்பம் பாடும் தகுதியுடையவர் என்பதை உணர்ந்து மணிமொழியாரே திருக்கோவையார் ஆசிரியர் என்று அறிந்து ஆசங்கை போக்கிக்கொள்ள ஏதுவாகும். இனி நூலுக்குள் புகுவோமாக.

திருக்கோவையாரில் உள்ள நானூறு பாடல்களும் நனி சிறந்த பாடல்கள். ஆதலின், எல்லாப் பாடல்களின் சொல்நயம் பொருள் நயங்களை எடுத்து இயம்புதல் எளிதன்று. என்றாலும் 'பானைச் சோற்றிற்கு ஒரு சோறு பதம்' என்னும் முதுமொழிக்கிணங்க அந்நானூறு பாடல்களின் கருத்துக்களில் ஈங்கொன்று ஆங்கொன்றாகச் சிலவற்றையே ஈண்டெடுத்து இயம்ப எண்ணுகிறேன்.

கோவையில் குறிப்பிடும் மணமகன் மணமகளை அகப்பொருள் இலக்கணப்படி தலைவன் தலைவி என்று குறிப்பிடுவது

மரபாகும். அம்முறைக்கிணங்க மணிமொழியார் கூறிய தலைவனுடைய தன்மைகளையும் தலைவியின் பண்பையும் முதலில் சிந்திப்போமானால், அவர்கள் வாழ்க்கை பின்னால் எவ்வாறு சிறந்து விளங்கி இருக்கும் என்பது தெற்றத்தெளிய வரும்.

**தலைவன் தன்மை**

"கார், அணிகற்பகம், கற்றவர், நற்றுணை, பாணர் ஒக்கல்
சீர்அணி சிந்தாமணி, அணிதில்லைச் சிவனடிக்குத்
தார்அணி கொன்றையன், தக்கோர்தம் சங்கநிதி, விதி, சேர்
ஊருணி உற்றவர்க்கு ஊரன், மற்றியாவர்க்கும் ஊதியமே"

என்னும் இப்பாடலில் தலைவனை மேகம், கற்பக விருட்சம், படித்தவர்களுக்கு நண்பன், பாணர்கட்கு உறவினன், சிந்தாமணி, கொன்றைமாலை, சங்கநிதி, ஊழ், ஊருணி என்று கூறியுள்ளார். இவ்வாறு கூறியதற்கு ஏற்ற காரணங்கள் உண்டு. மேகம் கைம்மாறு கருதாமல் பிறர்க்குக் கொடுக்கும் தன்மையுடையது. கற்பகம் வேண்டியபோது வேண்டுபவர் வேட்கைக்கேற்ப கொடுக்கவல்லது. நினைத்ததைத் தருதலில் சிந்தாமணி நிகர் அற்றது. அவர் அவர்கட்கேற்ற பயன் கொடுக்கவல்லது விதி. பொதுக்குளமோ கிணறோ எவர்க்கும் நீரை ஈந்து இன்புறுத்தவல்லது. இன்னோர் அன்ன இயல்பு இத்தலைமகன்பால் பொருந்திக் கிடந்தமையின் அவனுக்குக் காரும், கற்பகமும், சிந்தாமணியும், சங்கநிதியும், விதியும் நிகராயின. இவன் கல்வி அறிவில் சிறந்து விளங்கினமையால் கற்றவர்க்கு நற்றுணையாகவும் கல்வியறிவுக்கேற்பக் கடவுள் அன்பும் பெற்றவனாக விளங்கினமையால் சிவனடிக்குத் தார் அணி கொன்றையனாகவும் திகழ்ந்தான்.

இனித் தலைவியின் தன்மையை எவ்வாறு குறிப்பிட்டுள்ளார் என்பதையும் சிந்திப்போமாக. பெண்களுக்குப் பிறப்புரிமையாய் இருப்பது நாணம். இந்த நாணத்தை அவர்கள் உயிரினும் சிறந்ததாகக் கருதுவர் என்பது நம் முன்னையோர் கருத்து. ஆனால் அதனினும் சிறந்ததாகப் பெண்கள் கொள்ள வேண்டியது கற்பு என்பதை அறிஞர்கள் அறிந்து கூறியதை நாம் சிந்திக்கும்போது பெண்களுக்குரிய பொறுப்பு அளவிடற்கரியது என்பது புலனாகும். இல்லையானால் ஒல்காப் பெருமைத் தொல்காப்பியனார்,

"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று"

என்று விதி வகுக்கமாட்டார். இதனைக் கருத்துள்கொண்ட ஆசிரியர் தலைமகள் இலக்கணத்தை இயம்புகையில்,

"தாயிற் சிறந்தன்று நாண்தைய லாருக்கந் நாண்தகைசால்
வேயிற் சிறந்தமென் தோளிதிண் கற்பின் விழுமிதன்றீங்
கோயிற் சிறந்துசிற் றம்பலத் தாடும்எம் கூத்தப்பிரான்
வாயிற் சிறந்த மதியிற் சிறந்த மதிநுதலே"

என்று கூறி அவளது இயற்கை எழிலால் புறப்பண்பையும், கற்புச் சிறப்பால் அகப்பண்பையும் நன்கு விளக்கினர்.

இவ்விரு கோவைப் பாடல்களால் தமிழ்நாட்டுத் தலைவன் தலைவியர் எவ்வாறு இலங்கினர் என்பது நமக்கு நன்கு புலனுகின்றது. இங்ஙனம் நலத்தாலும் குணத்தாலும் ஒற்றுமைப் பட்ட தலைவன் தலைவியர் வாழ்க்கையில் இன்ப துன்பமும் இருவர்க்கும் ஒன்ருகவே துய்க்கநேருமே அன்றி வேற்றுத்தாழ்வாக நேராது என்பதை நன்கு விளக்கவே மணிமொழியார்,

"காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்துள் ஓர்உயிர் கண்டனம் யாம்இன்று யாவையுமாம்
ஏகத் தொருவன் இரும்பொழில் அம்பல வன்மலையில்
தோகைக்கும் தோன்றற்கும் ஒன்ருய் வரும்இன்பத் துன்பங்களே."

என்று மொழிந்தனர்.

இப்பாடலிலிருந்து ஆசிரியர் பொருள்களைக் கூர்ந்து கவனிக்கும் இயல்புடையவர் என்பது புலனுகிறது. காக்கையை நாமும் பார்க்கிருேம். அதற்கு இரு கண்கள் இருப்பதையும் உணர்கிருேம். ஆனல், அவ்விரு கண்களும் ஒரே சமயத்தில் ஒரு பொருளைப் பார்க்கும் வலியற்றவை. அஃது ஒரு பொருளைப் பார்க்கின் தலையைச் சாய்த்தே காண்பதை ஆசிரியர் உணர்ந்தார். அவ்வுணர்வைத் தக்க இடத்தில் அமைக்கத் தலைவன் தலைவியர்களை இடமாகக்கொண்டனர். தலைவன் தலைவியர்க்கு உடல் இரண்டே ஆயினும் உயிர் ஒன்றேயாகும் என்பதற்குக் காக்கையின் இரு கண்களை உவமை கூறி விளக்கிய தன் நுட்பத்தை என்னெனெ வியப்பது!

உவமையைக்கூறி அதனின்றும் உபமேயத்தைப் பெறவைக்கும் திறனைத் திருக்கோவையாரில் பல இடங்களில் காணலாம். இதனை முதற்பாட்டிலேயே அறியலாம்.

"திருவளர் தாமரை சீர்வளர் காவிகள் ஈசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலையொர் வல்லியின்ஒல்கி அனநடைவாய்ந்து
உருவளர் காமன்தன் வென்றிக் கொடிபோன்று ஒளிர்கின்றதே"

என்பது அம்முதற் பாடல்.

இதில் காணப்படும் தாமரை முகத்திற்கும், காவிகள் கண்ணிற்கும், குமிழம்பூ மூக்கிற்கும், கோங்கமலர் முலைக்கும், காந்தள் கைகளுக்கும், வல்லிக்கொடி இடைக்கும், உவமையாக இருப்பதை உணர்க. இவ் ஒரு பாட்டே இப்புலவர் பெருமானின் புலமைத்திறத்தை நன்கு தெளிவாக்குகின்றது. அகப்பொருள், முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்னும் முப்பொருளையும் அடிப்படையாகக் கொண்டு அமைவது. அம்முப்பொருள்களையும் இம்முதற்பாடலில் ஆசிரியர் அமைத்துப் பாடியுள்ளார். தாமரை மருதநிலத்திற்கும், காவி நெய்தல் நிலத்திற்கும், குமிழ் முல்லை நிலத்திற்கும், கோங்கு பாலைநிலத்திற்கும், காந்தள் குறிஞ்சி நிலத்திற்கும் உரிய மலர்களாக இருத்தலின் முதற்பொருளும் கருப்பொருளும் சுட்டியவாறாயின. பைங்காந்தள் எனக் குறிஞ்சிக்குரிய பூவிலே முடித்தலால் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறித்தலின் உரிப்பொருளும் கூறியவாறாயிற்று. இதனை மேலும் விரிப்பின் பரக்கும் என இத்துடன் சுருக்கப்பட்டது.

திருக்கோவையாரில் சீரிய கருத்துக்கள் பல காணப்படுகின்றன. தலைவன் தலைவியைத் தன்னூருக்கு அழைத்துக்கொண்டு சென்றான். அதனை ஆற்றாத நற்றாய் தன் மகளைத் தேடிவரப் புறப்பட்டாள். வழியில் யோகதண்டம் தாங்கிய முக்கோல்பகவரை நோக்கித் தன் மகள் செய்தியைக்கூற அவர்கள் அவ்வம்மைக்கு நல்லறிவு கொளுத்த 'அம்மையீர் சந்தனம், முத்து, சங்கு ஆகிய இவை பிறர்க்குப் பயன்படாவகையில் தாம் தாம் பிறந்த இடத்திலேயே இருப்பின் யாது பயன்? விரும்பினவர்கள்பால் சென்றால் அன்றோ அவை பெருமை அடையும். அதுபோலவே உம் திருமகளை நீரே நும் வீட்டில் வளர்த்து வைப்பின் பயன் உண்டோ? ஆதலின் அவளை விரும்பினவன் கொண்டுசென்றதில் தவறில்லை. அதுகுறித்து மகிழ்வீராக என்று கூறினர். அதுவே,

"சுரும்பிவர் சந்தும் தொடுகடல் முத்தும்வெண் சங்கும்எங்கும்
விரும்பினர் பால்சென்று மெய்க்கணி யாம்வியன் கங்கைஎன்னும்
பெரும்புனல் சூடும் பிரான்சிவன் சிற்றம் பலம்அனைய
கரும்பன மென்மொழி யாரும்அந் நீர்மையர் காணுநர்க்கே."

என்பது.

(தொடரும்)

---

# அறிவியலும் தமிழாராய்ச்சியும்

[திரு. பி. ஞானதுசாமி, பி.எஸ்ஸி., திண்டிவனம்.]

பழந்தமிழிலக்கிய ஆராய்ச்சிக்கு ஓரளவு அறிவியற்புலமை இன்றியமையாதது. ஏனெனில், சங்க இலக்கியத்தில் மரம், செடி, கொடி, பறவைகள், விலங்குகள் முதலியவைகளைப்பற்றி கணக்கிலாக் குறிப்புகள் வருகின்றன. இக்குறிப்புகளைப் பற்றித் தெளிவாக உணர ஓரளவு அறிவியற்புலமை வேண்டியதாயிருக்கின்றது. ஐந்திணை ஒழுக்கத்திலுள்ள நிலப் பாகுபாடுகளும் கருப்பொருள் வேற்றுமைகளும் அறிவியல் அடிப்படையைக் கொண்டுளதால், கருப்பொருள் விளக்கத்தில் சில பிழைகளையும் மயக்கங்களையும் காண்கிறோம்.

சங்கநூல்களில் கள்ளி என்ற செடியைப்பற்றிப் பல குறிப்புகள் உள்ளன. கள்ளிகளில் பலவகைகள் நம்நாட்டில் இருக்கின்றன. சில வெளிநாட்டிலிருந்து இந்நாட்டுக்குக் கொண்டுவரப்பட்டவை. சில இந்நாட்டுக்கே உரியவை. சில ஆண்டுகட்குமுன் எங்கும் பெருவாரியாகக் காணப்பட்ட சப்பாத்தி, அயல்நாட்டு நாகதாளிக்கள்ளியை நூல்களில் வரும் கள்ளியென்று பொருள் கூறினோமானால் அது மிகவும் பிழைபட்டதாகும். ஏனெனில், தாவரநூல் வரலாற்றுப்படி இது ஏறக்குறைய 150 ஆண்டுகட்கு முன் இந்தியாவில் நுழைந்தது. மற்றும் சங்கநூலில் கூறப்பட்ட கள்ளி கவைத்த இரட்டை முட்களை உடையது.

> " உழுதூர் காளை யூழ்கோ டன்ன
> **கவைமுட் கள்ளிப்** பொரியரைப் பொருந்தி "
>
> " களரி யோங்கிய **கவைமுட் கள்ளி** "
>
> " **கவைமுட் கள்ளிக்** காய்விடு கடுநொடி "

இந்த இரட்டைமுள் நாகதாளிக்கள்ளிக்குக் கிடையாது. தாவர நூற்படி எல்லாக் கள்ளிவகைகளும் இரு குடும்பங்களைச் சேர்ந்தவை. ஒரு குடும்பம் இரட்டை இரட்டையாக முட்களைக் கொண்டதாகவும் மற்றொரு குடும்பம் கும்பல்கும்பலாக பல முட்களையுடையதாகவும் இருக்கும். இரட்டைமுட் கள்ளிகளே நம் நாட்டைச் சேர்ந்தவை. ஆதலின் சங்க இலக்கியத்தில் கூறப்படும் கள்ளி, பொதுவாக எல்லோரும் அறிந்த நாகதாளி அல்ல. அது திருகுக்கள்ளிபோன்ற இரட்டைமுட் கள்ளி வகையைச் சேர்ந்தது என முடிவு கட்டலாம். சிவந்த பூவையுடையதாகச் சங்க நூல்களில் கூறப்படும் இலவம், தற்காலம் பல

ரும் அறிந்த வெள்ளைப்பூவையுடைய இலவமரம் அன்று. அது சிவந்த பூவையுடைய மலையாளத்தில் மிகுதியாகக் காணப்படும் முள்ளிலவமாகும். தமிழ்நாட்டில் பஞ்சுக்கு மிகுதியாகப் பயன் படும் வெள்ளைப் பூவுடைய இலவம் வெளிநாட்டிலிருந்து இங்கு வந்தது. அதேபோல் சங்கநூல்களில் 'அவரை' என்றழைக்கப் படும் கொடி, தற்காலம் நாம் பேசும் அவரைச்செடி அல்ல. அது நாம் வழங்கும் மொச்சையையே குறிக்கும். இதுபோல் பல தவறக்கூடிய இடங்கள் உள்ளன. சில அறிஞர்கள் மொழி பெயர்க்கும்போதும், உரையெழுதும்போதும் இம்முறையான பிழைகளைச் செய்துள்ளனர். சிலர் சிறந்த பாடமாற்றத்தை விடுத்துப் பொருத்தமற்ற பாடத்தைக் கையாண்டுள்ளார்கள்.

பி. டி. சீனிவாசய்யங்கார் எழுதிய "கி. பி. 600 ஆண்டு கட்கு முற்பட்ட தமிழர்" என்ற ஆங்கில நூலில் சில பிழைகள் காணப்படுகின்றன. அகநானூற்றுப் பாடலில்வரும் 'கடலை' என்ற சொல்லை 'நிலக்கடலை' (Ground Nut) என்று மொழிபெயர்த் திருக்கிறார். தாவரநூல் வரலாற்றுப்படி மணிலா அமெரிக்கா வில் இருந்து இந்தியாவுக்குக் கொண்டுவரப்பட்ட செடிகளில் ஒன்று. நம் நாட்டுக்குரிய 'கொத்துக்கடலை'யை மறந்து 'நிலக்கடலை' என்றெழுதியது வியப்பைத் தருகின்றது. கவலைக் கிழங்கு என்றொரு செடியைப்பற்றிக் குறிப்புகள் மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி, நற்றிணை முதலிய நூல்களில் வருகின்றன. கவலை என்பது தற்போது காணப்படும் மரவள்ளிக்கிழங்கு (Tapioco) அயல்நாட்டுக் குச்சிக்கிழங்காயிருக்கலாம் என் றெழுதியுள்ளார். 'கொழுங்கொடி' என்ற அடைமொழியொடு வரும் கவலைக்கிழங்கை மரம்போல் வளரும் குச்சிக்கிழங்கெனக் கூறுவது பொருந்தாது. மற்றும் இந்த மரவள்ளிக் கிழங்கும் வெளிநாட்டிலிருந்து இந்நாட்டிற்குக் கொண்டுவரப்பட்டது.

அன்றில் என்று தமிழிலக்கியத்தில் பயிலும் பறவையை 'நைட்டிங்கேல்' என்று எழுதியுள்ளார். அன்றிலுக்கும், 'நைட்டிங்கேல்' என்ற பறவைக்கும் இரவைத்தவிர வேறு யாதொரு தொடர்புமில்லை. 'நைட்டிங்கேல்' மிகச்சிறிய பறவை. சில குறிப்பிட்ட காலங்களில் வெளிநாடுகளிலிருந்து இங்கிலாந் துக்கு வரும் பறவை. அன்றில் வேறு; 'நைட்டிங்கேல்' வேறு. அன்றிலை ஆங்கிலத்தில் 'நைட் ஹீரான்' என்றழைப்பர்.

"சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ மேய்ந்து" என்ற குறிஞ்சி, அகநானூறு 158-ம் பாட்டு வரியில் 'சுடர்ப்பூ' என்ற சொற்கு 'சூரியகாந்திப்பூவுமாம்' என்று மு. இராகவய்யங்கார் தனது அகநானூற்றுப் பதிப்பில் குறிப்பு எழுதியுள்ளார். 'சுடர்' என்பதைச் சூரியன் எனக்கொண்டு 'சுடர்ப்பூவை,' சூரியகாந்தி

யாக்கிவிட்டார். சூரியகாந்திச் செடியைப்பற்றிப் பழந் தமிழ் நூல்களில் யாதொரு குறிப்பும் கிடையாது. மற்றும் கதிரவனை நோக்கித் திரும்பும் இயக்கம் உடையதாக நெருஞ்சியைத்தவிரப் பிறிதொன்றையும் தமிழிலக்கியத்தில் காணமுடியாது. 'சுடர்ப்பூ' என்று தனியாக ஒரு பூவுக்கோ செடிக்கோ பெயர் இருந்ததாகத் தெரியவில்லை.

> "சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்" —நற்றிணை.
>
> "சுடர்ப்பூங் கொன்றை யூழுறு விளநெற்று" —அகம்.
>
> "சுடர்புரை தோன்றி புதறலை கொள"
>
> "சுடர்கொ ளகலிற் சுருங்குபிணி யவிழ
> சுரிமுகிழ் முசுண்டை பொதியவிழ் வான்பூ"

என்று இம்முறையில் பல பாடல்களில் 'சுடர்' என்பதோடு சேர்த்தோ, உவமித்தோ தாமரை, கொன்றை, தோன்றி முதலிய பூக்கள் கூறப்பட்டிருக்கின்றன. இவ்விடங்களில் சுடர் எனும் சொல், விளக்கு, அகல், தீ ஆகியவைகளையே பெரும்பாலும் குறிக்கின்றனவே அன்றிக் கதிரவனை அல்ல. மலைபடுகடாத்தில் 'சுடர்ப்பூ' என்ற சொல் வருகின்றது.

> "சூழியிற் பொலிந்த சுடர்ப்பூ விலஞ்சி" —229-மலைபடுகடாம்.

'சுனையிடத்து மேலெழுந்த குவளை முதலியவற்றின்' என்று நச்சினார்க்கினியர் உரை கூறுவதிலிருந்து குவளை, தாமரை போன்ற பூக்கள் 'சுடர்ப்பூ' என்றே அழைக்கவும் படுமெனத் தெரிகிறது. இந்த மலைபடுகடாம் வரியிலும், மேற்சொன்ன அகப்பாட்டு வரியிலும் சுடர்ப்பூ என்பது குறிஞ்சியில் வளர்வ தாகக் கூறப்பட்டதிலிருந்து, இதைக் குவளை என்றே கொள்ள வேண்டியது; அல்லது அதுபோன்றதொரு நீர்ப்பூ என்றுங் கொள்ளலாம். கடைசியாக, சூரியகாந்தி வெளிநாட்டிலிருந்து இந்தியாவுக்கு வந்த செடி என்று மு. இராகவய்யங்கார் அறிந் திருப்பாரானல், இம்முறையில் வலியப் பொருள்கூறிப் பிழைபட் டிருக்கமாட்டார்.

அகநானூற்றுப் பதிப்பில் ஒரு பாடமாற்றப் பிழை காணப் படுகின்றது.

> "பலவுக் காய்ப்புறத்த பசும்பழப் பாகல்
> கூதள மூதிலைக் கொடிநிரைத் தூங்க"

இந்தப்பாட்டு வரியில் 'கூதளம்' என்ற சொல்லுக்கு, ப்பாட மாற்றமாக 'கூழை' என்ற சொல் அடியில் குறிப்பிடப்பட்டிருக் கின்றது. ஆனல் பதிப்புகளில் கையாளப்படும் 'கூதள' என்ற

பாடமாற்றம் பொருத்தமல்ல. அடிக்குறிப்பில் விடப்பட்ட 'கூழை' என்ற பாடமாற்றம் ஐந்நிலக் கருப்பொருளமைதிக்கும், அறிவியல் அறிவுக்கும் பொருத்தமானதாகும். பாகற் செடியைப் பாலைநிலச் செடியாக அகம், 18, 177 பாடல்களும் பிறநூல்களும் கூறுகின்றன. ஆனால் 'கூதளம்' எனும் செடியை குறிஞ்சியில் நீருக்கருகில் வளரும் செடியாகவே சங்கநூல்கள் கூறும்.

"நீர்திகழ் சிலம்பி னோராங் கவிழ்ந்த
வெண்கூ தாளத் தந்தூம்பு புதுமலர்" —நற்றிணை.

"..............................நம்படப்பைத்
தண்ணயந் தமன்ற கூதளங் குழைய" —அகம்-68.

இம்முறையாகப் பல பாடல்கள் கூதளம் குறிஞ்சியில் நீருக் கருகில் வளர்வதாகக் கூறுகின்றன. சங்கநூல்களில் 'கூதளம்' பாலையில் வளர்வதாகக் கூறும் வேறு பாடல்களில்லை. நீருடைய இடத்தில் வாழ்வதற்கேற்ப உட்டுளை உடையதாக உள்ள கூதளம் பாலைநிலத்தில் உள்ளதாகக் கொள்வது பொருந்தாது. மற்றும் பாலைநிலப் பாகற்செடியின் பசும்பழத்தைக் கூதளமூதிலை யொடு அருகில் வைத்துச் சொல்வது பொருத்தமின்று. வறட்சியான காலத்தில் பாகற்செடியின் பழைய இலைகள் காய்ந்து சுருங்கிக்கிடப்பது இயற்கை. ஆதலின் கூழையான மூதிலை அஃதாவது, குறைந்துபோன பழுத்தஇலை என்று பொருள் தரும் 'கூழை மூதிலை' என்ற பாடமே பொருத்தமானது. "கூழைக் கற்றை," என்ற சங்கநூற் சொற்றொடர்களில் கூழை இப்பொருளில் அடைமொழியாகப் பயில்வதையும் காண்க. இப்பாடம் பாலைக்கேற்பக் கருப்பொருளை அரண்செய்து காட்டுவதொடு, இயற்கைக்கும் அறிவியலுக்கும் முரண்படாதும், பாட்டுக்கு இயல்பாக ஆற்றொழுக்காகப் பொருள் தருவதாகவும் அமைந்துளது.

தொல்காப்பியம் — பொருளதிகாரம் — நச்சினார்க்கினியர் உரைப் பதிப்புகளில் மேற்கோளாகக் காட்டப்பட்ட,

"நிறைபட வோங்கிய முழவுமுதற் புன்னை
மரவரை மறைகம் வம்மதி பாணாள்,"

என்று வரும் நற்றிணைப் பாடல்வரியில் 'புன்னை' என்பது 'பெண்ணை' என்றிருக்கவேண்டும். ஏனெனில் புன்னையின் அடி மரம் முழவுபோன்று நடுபெருத்து நுனிகள் சிறுத்துக் காணப் படுவதைக் கடற்கரையில் பார்த்ததில்லை. ஆனால் கடற்கரையில் பனைமரங்களின் அடிப்பாகம் முழவுபோன்று நடுபெருத்து இருப்

பதைக் கண்டிருக்கலாம். முழவுபோன்ற முதலையுடைய புன்னை என்று புன்னைமரத்தை வர்ணித்துக்கூறும் பாடல்கள் சங்க நூற்களில் காணப்படவில்லை.

"முழாவரைப் போந்தை பொருந்தி நின்று"
"முழாவரைப் போந்தை யரவாய் மாமடல்"

என்று வரும் புறப்பாடல் வரிகளிலும் பிற நூற்பாடல்களிலும் பனைமரம் இம்முறையில் வரணிக்கப்பட்டுளது. பனை ஏட்டில் பெயர்த்தெழுதியவர்கள் 'பெ' என்பதை 'பு' ஆகவும், ணகரங்களை னகரங்களாகவும் தவறி எழுதியிருக்கலாம். 'பராரைப் புன்னை,' 'பராரைப் பெண்ணை' என்று இரண்டிற்கும் ஒரே வழக்கு பல பாடல்களில் பயின்றதைப் பார்த்து இதற்கும் பொருந்தும் என்ற மயக்கத்தில் 'பெண்ணையை' புன்னையாகத் திரித்திருக்கலாம்.

முசுண்டை என்றொரு செடி சங்கநூல்களில் வழங்குகிறது. தாவர நூலோர் இது மிகவும் அழகான செடியென்று கூறுவர். இரவில் வெண்மையாகப் பூக்கும். இதன் மொக்கு சுரிந்த இதழ்களை உடையதாக இருக்கும். பழம் கொட்டை கொண்டதாகக் காய்ந்து இருக்கும். தமிழ்நூல்களிலும் புலவர்கள் இது இரவில் விண்மீன்கள்போல் வெண்மையாகப் பூப்பதை வரணித்துள்ளனர். 'சுரிமுகிழ்,' 'சுருங்குபிணியவிழ' என்ற சொற்களால் இதன் சுரிந்த தன்மையைக் குறிப்பிட்டுள்ளனர். "கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும்," என்று வரும் சிறுபாணாற்றுப்படை 166-வது வரியில் முசுண்டை கூறப்பட்டுளது. 'கொட்டங் • கொள்ளவும்,' என்பதற்கு 'கொட்டை கொள்ளவும்,' என்பது பாடமாற்றமாகக் கூறப்பட்டுளது. முசுண்டைச் செடி காய்த்துக் கொட்டைகொள்ளும் ஒரு செடியாதலாலும் கொட்டங் கொள்ளவும் என்பது நேரான தெளிவான பொருள் தராதலாலும் விடப்பட்ட பாடமான "கொட்டை கொள்ளவும்," என்பதே சிறந்த பாடம்.

அரிசியிலிருந்து மது செய்தல்பற்றி பெரும்பாணாற்றுப் படையில் ஒரு குறிப்புக் காணப்படுகின்றது.

"அவையா வரிசி யங்களித் துழவை
மலர்வாய்ப் பிழாவிற் புலர வாற்றிப்
பாம்புறை புற்றிற் குரும்பி யேய்க்கும்
பூம்புற நல்லடை யளைஇத் தேம்பட
எல்லையு மிரவு மிருமுறை கழிப்பி
வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த
வெந்நீ ரரியல் விரலலை நறும்பிழி"　　　—275-281.

நன்றாக அரைத்த கொழியலரிசியில் பாம்புப் புற்றின்கண் கிடந்து முளைக்கும் புல்லரிசி முளையைப்போன்ற புசும்புற முளையைச் சேர்த்து இரண்டுநாட்கள் வைத்து வடிக்கும் கள் என்பது மேற்கண்ட வரிகளின் சுருக்கமான பொருள். முளைக்கும் முளையில் 'என்சைம்' (Enzyme) என்று சொல்லப்படும் உயிர்ச்சத்து இருக்கின்றது. இது 'பாக்டீரியா' போன்ற நுண்ணுயிர்கள் போல் வேலைசெய்து மாவைப் புளிக்கச்செய்து மதுவாக்குகின்றது. ஆங்கில நாட்டிலும் உருளைக்கிழங்கு மாவில் முளைத்த பார்லிமுளையைச் சேர்த்து மது விறக்குவார்கள். எல்லாப் பதிப்புகளிலும் 'நல்லடை' என்ற பாடத்தைக் கையாண்டிருக்கின்றனர். ஆனால், 'நெல்லடை' என்பதே பொருத்தமான பாடம். இது பாடமாற்றமாக அடியில் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. 'நல்லமுளை' என்ற பொருள் தரும் 'நல்லடை' என்ற பாடத்தைவிட 'நெல்முளை' என்ற பொருள் தரும் 'நெல்லடை' என்ற பாடம் பொருத்தமானது. வெறும் அரிசிமுளை மாவை மதுவாக்க வல்லதல்ல. மற்றும் சிந்தாமணி, திருமலைமுருகன் பள்ளு முதலிய நூல்களிலும் நெல்லைப் பயன்படுத்தி மது செய்தல் சொல்லப்பட்டிருக்கிறது. "தோழ யாம் பெரிது முண்டுந் தொண்டிக் களிதனை," என்ற சிந்தாமணி, 1233-ம் பாட்டு வரிக்கு உரை யெழுதிய ஆசிரியர், 'நெல்லாலாக்கின கள்ளாகிய இதனையும்,' என்று பொருள் கூறியுள்ளார். ஆதலின் அறிவியற்படியும், பிறநூல் வழக்குப்படியும், இடத்திற்கேற்ற பொருட் சிறப்பு நோக்கியும் 'நெல்லடை' என்ற பாடமே சிறப்பானது. மலைபடுகடாத்திலும், "துளங்கு தசும்பு வாக்கிய பசும்பொதித் தேறல்," என்ற 463-ம் வரிக்குப் 'பிடாவினின்று வார்த்த பசியமுளைத்த நெல்லாலாக்கிய கட் டெளிவு' என்று பொருள் இருப்பதும் இதை வலியுறுத்தும். 265-ம் அகப்பாட்டிலும் நெல்லாலாக்கின கள் கூறப்பட்டுளது.

செந்நாய் என்பது மைசூர்ப் பகுதியில் கூட்டம் கூட்டமாகக் காணப்பட்ட விலங்கு. இந்நாய்கள் கூட்டம் கூட்டமாக வேட்டையாடுவதை விலங்கு நூலறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். கூட்டமாயிருக்கையில் இவைகள் மிகவும் பயங்கரமானவை. சிங்கம், புலி ஆகிய எந்த விலங்கையும் கொன்று தின்றுவிடும். இத்தகைய இதன் கூட்டுவலித் தன்மையை ஒரு உவமையாக பெரும்பாணாற்றுப் படையில் கையாண்டுள்ளார்.

"சூன்மகள் மாறு மறம்பூண் வாழ்க்கை
வலிக்கூட் டுணவின் வாட்குடிப் பிறந்த
புலிப்போத் தன்ன புல்லணற் காளை
செந்நா யன்ன கருவிற் சுற்றமொடு

கேளா மன்னர் கடிபுலம் புக்கு
நாளா தந்து நறவுநொடை தொலைச்சி" —136-141 வரிகள்.

'தமது வலியாற் கூட்டமாகக் கொள்ளைகொண்டு செல்லும் குடியிற் பிறந்த, செந்நாய்க் கூட்டம்போன்ற சுற்றமொடு பகைவர்களுடைய நிரையைக் கவர்ந்த,' என்ற பொருள்கொண்டது மேற்சொன்ன வரிகள். செந்நாய்கள் கூட்டமாக வேட்டையாடுவது வீரர்கள் கூட்டமாகச் சென்று நிரை கவர்தலுக்கு ஒப்பிடப் பட்டிருக்கின்றது. பதிப்பில் 'செந்நாய்' என்ற பாடம் 'செல் நாய்' என்றுப் பிரித்துப் பொருள் கொள்ளும்படி கையாளப்பட்டிருக்கின்றது. அது அவ்வளவு பொருத்தமல்ல. செந்நாய்களின் முக்கியமான பண்பைக், கூட்டமாகச் சென்று நிரை கவர்தலுக்கு உவமித்திருப்பதை உரையாசிரியர்களும் பதிப்பாசிரியர்களும் உணரவில்லை. அதனால் ' செந்நாய்' என்று கொண்டு 'செல் நாய்' என்றுபிரித்துப் பொருள்கொண்டு இடர்ப்பட்டனர். 'வலிக்கூட்டுணவின் வாட்குடிச் சுற்றம்,' கூட்டமாய் வேட்டம் போகும் செந்நாய்க்கு ஒப்பிடப்படல் பொருத்தமானது. அச் சுற்றத்தில் பிறந்த சிறந்த காளை புலிக்கு ஒப்பிடப்பட்டிருப்பதும் பொருத்தம். 'செந்நாயன்ன கருவிற் சுற்றம்,' என்ற தொடரில் உவமையும், சொற்களும் உடனுக்குடன் பொருந்தும் அழகு 'சென்னாய்' என்ற பாடத்தால் பெறமுடியாது. பாலைநில விலங்காகச் செந்நாய் கருதப்படுவதும், அகம், நற்றிணை, ஐங்குறுநூறு, புறம் முதலிய நூல்களில் இது கூறப்படுவதும் இதுசார்பாக நினைவு கொள்ளவேண்டும். 'வலிக்கூட்டுணவின் வாட்குடி,' என்ற பெரிய தொடரைச் சுற்றத்தை வரணிக்கப் பயன் படுத்தியதின் நுட்பத்தையும் சிறப்பையும் உணர்ந்தோர்க்கு அதற்கேற்பச் 'செந்நாய்' என்ற பாடமே பொருந்தும் என்பதில் ஐயமிராது. நம் பழம்புலவர்கள் இயற்கையை நுனித்தறிந்தவர்கள். அவ்வறிவு மிகவும் இல்லாத பிற்காலத்தார் அடைமொழிகளின் முழுப்பொருளை உணராது சொல்லளவில் நின்று வலியப் பொருள்கூறிச் சென்றனர். அதற்கேற்பப் பாடங்களைத் திருத்தியும், சிறப்பற்ற பாடங்களை மேற்கொண்டும் சென்றனர்.

" வேறுபடக் கவினிய தேமாங் கனியும்
பல்வே றுருவிற் காயும் பழனும் "

என்றுவரும் 528—529 மதுரைக்காஞ்சி வரிகளுக்கு நச்சினார்க்கினியர், "இனிய சாதி மாம்பழங்களும், பலவாகிய வேறுபட்ட வடிவினையுடைய பாகற்காய், வழுதுணங்காய் முதலிய காய்களையும், வாழைப்பழம், முந்திரிகைப்பழம் முதலியவைகளையும்" என்று பொருள் கூறியுள்ளார். இதில் வரும் முந்திரிகைப்பழம் கொடிமுந்திரிகை எனப்படும் திராட்சையைக் குறிப்பிடலாம்.

ஆனால் கொடிமுந்திரிகை சங்ககாலத்தில் இருந்திருக்கமுடியாது. அதைப்பற்றிச் சங்க நூல்களில் வேறொரு குறிப்பும் இல்லை. மற்றும் இது தமிழ்நாட்டிற்குரியதன்று. அதனால்தான் பழந் தமிழர் முந்திரிகைப்பழ மதுவைப் பயன்படுத்தவில்லை. கிரேக்க, உரோம நாட்டிலிருந்து அம் மதுவகைகளை இறக்குமதி செய்து கொண்டனர். "பழனுங்" என்ற ஒரு சொல்லை வைத்துக் கொண்டு தன் காலத்தில் வழங்கிய ஒரு செடியை சங்ககாலத் திற்குரியதாகக் கூறுவது பொருத்தமல்ல. 14-ம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டு வாழ்ந்த நச்சினார்க்கினியர் கி.பி.6-ம் நூற்றாண்டுக்கு முன்னர் இருந்ததாக வழுதுணங்காய் எனப்படும் கத்தரிக் காயைக் கூறுவதும் பொருத்தமல்ல. முந்திரிமரப் பழம் எனக் கொள்ளவும் முடியாது. ஏனெனில் போர்த்துக்கீசியரால் 15-ம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு இது கொண்டுவரப்பட்டது.

பெருங்கதையிலும் இம்முறையான மயக்க உரையைக் காணலாம்.

"புன்கும் நாவலும் புரள வெற்றிக்
கொங்கார் கோடலொடு கொய்யல் குழைஇ"

—நருமதை கடந்தது 49-50 வரிகள்.

இதில் வரும் 'கொய்யல் குழைஇ' என்ற சொற்றொடர்க்கு கொய்யல் மரம் (அதாவது) கொய்யாமரம் என்று உரையாசிரியர் பொருள் கொண்டுள்ளார். 15-ம் நூற்றாண்டில் போர்த்துக்கீசியர்களால் கொண்டுவரப்பட்ட ஒரு செடியை அதற்கு சில நூற்றாண்டுகளுக்குமுன்னர் வாழ்ந்த பெருங்கதை ஆசிரியர் குறிப்பிட்டார் எனச்சொல்வது பொருத்தமல்ல. அதோடு 'கொய்யல் குழைஇ' எனும் சொல், வேறு எளிதான பொருத்தமான பொருள் கொள்ளும்படி இருக்கிறது. 'கொய்யல்' என்பதைக் 'கொய்யாமரம்' என உரைக்க எவ்வித சான்றும் கிடையாது. மற்றும் 'கொய்தழை' என்ற பாடமாற்றமும் இருப்பதை நோக்கும்போது வேறுபொருள் கொள்வதுதான் பொருத்தம் எனத் தெரிகிறது.

இதிலிருந்து தமிழிலக்கிய ஆராய்ச்சிக்கு அறிவியல் சிறிதளவாவது தேவை என்பது இனிது விளங்கும். உரையாசிரியர்கள் தங்கள் காலச்சூழலை மறந்து உரையெழுதி இருப்பார்களானால் மயக்கப்பொருட்களுக்கும், பிழை உரைகளுக்கும், பொருத்தமற்ற பாடங்களுக்கும் வழி இருந்திருக்காது.

# "செந்தமிழ் வேட்கை"

[செல்வி, எஸ். கமலாதேவி, இரத்தினபுரி.]

பைந்தமிழ் மொழியின் செந்தமிழ் நூற்களை ஒற்கத்தின் ஊற்றும் துணை என எண்ணி எக்காலும் ஒய்விலாது ஆய்வுடன் கற்றுவருங்கால் எழும் இந்நினைவலைகளை "தையலின் ஐயமன்றே" என நினைவுற்று, காலையும் மாலைதானும் இல்லதோர் கனகக் கற்பகச் சோலை யிருட்பிழம்பால் நையவுருவண்ணம், நாடிவந்து எனக்கு இன்தமிழ் நல்கிய நங்காய்! என திலக்கியக் கனவுகளை வேண்டுவையாயின் செவிசாய்ப்பாயாக.

எள்ளினின்றெண்ணெய் எடுப்புமாறு இலக்கியத்துறையி னின்றே இலக்கண வரன்முறைகள் அரும்புதல் இயற்கை என் றமை மறந்தார் சிற்சிலர். அம்மாற்றத்தினால் இலக்கியவுலகில் நிலவாதன பல புகுதலுற்றன எனினும் அவை நயங்காண விழைவாருக்கு இன்னல் அளிப்பதன்றி பிறிதன்றென்றமை யான் காண்கின்றனன். என்னையோவெனின் வீரசோழிய ஆசி ரியர் ழகர, ளகர வேற்றுமையினை ஒழிக்கும் விருப்பினராய் புதுமை நிலவும் சூத்திரம் யாத்தல் நேரிதென எண்ணினர் என்க. ஆகலான் எம்மொழியினும் செம்மொழியாகிய தமிழி னுக்கே சிறப்பினைப் பயக்கும் ழகரம் தன்னிலை இழக்குமேல் அச்செய்கையான் இழிதகவுளதோ எனும் சிந்தனையிலராய் இலக்கியமும் இயற்றுவாராயினர், சிலர். "திகட சக்கரச் செம் முகம் ஐந்துளான்" என்பது பக்தசிகாமணிகள் பாடிப்பரவும், கச்சியப்பசிவாச்சாரியர் இயற்றிய கந்தபுராணக் காப்புவரியா கும். திகழ் தசக்கரம் எனும் இருசொற்களும் புணருங்கால் திகள் தசக்கரம் என மருவி திகட சக்கரமாயிற்றுப்போலும்!

ஐந்தெழுத்தால் ஒருமொழி செம்மையுறுமேல் அம்மொழி சதுர்மறை ஆரியம் வருமுன் சகமுழுதும் தனதாக்கினதெனின் அதுவொன்றே முதுமொழி அநாதி என வியப்பின்றி மொழிய லாகுமென்பர் மனோன்மணீய ஆசிரியர். இந்நிலையில் ஒன்றே யாயினும் தனித்தமிழ் நூல் உளதோ என ஈசானசிவாச்சாரி யார் இலக்கணக்கொத்து உரையில் விடுத்துச்சென்றமை தமிழ் நாட்டில் பல தமிழ் உள்ளங்களில் மறுமலர்ச்சியினை உண்டுபண் ணவும் தனித்தமிழ்ப்பற்று வீசிப் பரந்திடலாயிற்று. பரிதிமாற் கலைஞனும், மறைமலையடிகளும் இத்துறையில் நிலவரை நீள்புக ழாற்றி, புத்தேளுலகும் தம்மைப் போற்றும்வண்ணம் வாழ்ந்த

செஞ்ஞாயிற்றுச் சுடர்மணிகள் என்பேனாயினும், சொல்லொக்கு மன்றிப் "பொருள் ஒவ்வாவால் சொல்லலாம் உவமையுண்டோ?" என்றுங்காணுத் தனித்தமிழ் வேட்கை இவ்விருவர் வுள்ளங்களில் மலர்ந்து தோன்றியமையால் எண்ணற்ற இலக்கியச் சொன்மாரி களைக் கேட்டின்புறும் நற்பேற்றினை நானிலத்தார் பெற்றனர். ஆதிபகவன் எனும் தொடர் பரிமேலழகர் எண்ணாத புதுப் பொருளினைப் பெறலாயினமையோடன்றி, முல்லைப்பாட்டும், பட்டினப்பாலையும் உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியரும் இறும்பூது எய்தும்வண்ணம் இணரூழ்த்து நறுமலராயின. இக் கைவண்ணம் இருபதாம் நூற்றாண்டின் முன்னேற்றக் குறி யென்னல் மிகையன்று எனில் மறைமலைக்கு நிறைமலை எனப் பெயர்சூட்டி வாழ்த்தி வணங்கி, போற்றிப் புகழ்ந்து கற்சிலை நாட்டிக் கண்டுகளிக்கலாம். இறந்த இளங்கோவும் மறைந்த சேரனும் நிறைந்த உள்ளத்தோடு புன்முறுவல்பூத்துத் தோன் றுவர். அடிகள் விதைத்த தமிழ்ப்பற்றின் விளைவால், தனித் தமிழ்க் கட்டுரைகள் வரைந்த தவமிகுசெல்வி திரு. நீலாம்பிகை யம்மையாரும், கனிவுற்ற கனிகண்ட காரைக்காலம்மையாரின் அழகுற்ற ஓவியத்தைக் கட்டுரைவாயிலாக வெளியிட்ட திரு. தாமரைக்கண்ணியம்மையாரும் தோன்றியமை, புதுமலர்க்கா விற் பூங்கொடி பூத்ததொக்கும்.

எனினும் பூவிற்கும் புல்லிதழ் உண்டு என்றமைக்கேற்ப, பரிதிமாற்கலைஞன் எனப் பெயரிய இலக்கிய அண்ணல், "மதி வாணன்" போன்ற அரிய நூற்களை யாத்தனராயினும், மொழி வரலாற்றினை வெளியிடும் விருப்பு மேற்கொண்டோராய் வரைய லுற்றபோழ்து, வடமொழிச் சொற்களை வாரி இறைத்தனர். பாஷையின் வேறுபாடு—சகபுருஷராகிய—அகஸ்மாத்தாய் எனும் பிறமொழிச் சொற்கள் தனித்தமிழ் உள்ளத்தோடு கலந்தமை மாற்றார் ஆற்றிய மாயமோ அன்றி வல்வினையோ?

மண்மகளறியா வண்ணச்சீரடியள் எங்ஙனம் அறிகுவன்? குழவி யிறப்பினும் ஊன்தடி பிறப்பினும்........எனும் செவ்விய பாவினுக்கு இலக்கியச்சோலை யமைக்க, விழைந்தமையால், "மானவிஜயம்," எனும் நாடகநூல் தோன்றலாயிற்று. அந்நிலை கண்ட தமிழ்மூதறிஞர் - ஆனதோ வெஞ்சமர் அலகில் பொற் புடைத் தமிழ்மகள் துயரினும் தவிர்ந்ததில்லையோ - என்றிங் ஙனே அயர்வு பெறலும், தமிழ்ப்பண்ணை திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை, M.A., M.L., அவர்கள் தமிழ் இலக்கிய வரலாறு வரைய விழைந்துழி மேற்கூறிய சில உண்மைகளைக் கூறிக் கண்ணீர் விடுத்தமை அந்நூல் இரண்டாம் பாகத்துட் காண்க. தனித் தமிழ் ஊற்றினை நண்ணிய நல்லாரின் உள்ளம் மானவிஜயத்தி

னுக்குத் தமிழ்ச்சொல் அமைக்காது சென்றமை செவிமடுக்க, ஊழ்வினை உருத்துவந்து ஊட்டினதென்றே கூறுதல்வேண்டும்.

"தனிமை கண்டதுண்டு—அதிலே
ஸார மிருக்குதம்மா"
"சுராதிப திமாலய னுமாவொடு சலாமிடு
சுவாமிமலை வாழும் பெருமாளே."

எனும் இவற்றின் ஆசிரியர்களும் தமிழ் வளர்க்கும் எழிலி போல்வராயின் பரிதிமாற்கலைஞனும் தமிழ்மகளின் தமிழ்ப் பெரும் செல்வமே, என்னல் உயர்வுடைத்தாகும்.

உயர்திணை எனும் இலக்கணத் தொடரினை இவண் நினைத்தல் சாலும். "உயர்திணை" வினைத்தொகையோ, பண்புத் தொகையோ எனும் ஐயம் நிகழா நிற்குமேல் உயர் எனும் முதல்நிலை நின்று உயர்ந்த திணை என அகர ஈற்றுப்பெயரெச்சமாய் இறந்தகாலம் தொக்கு நிற்றலின் வினைத்தொகையாம். இதற்கு ஏனைக்காலமும் தொகுமாறு அறிக. இதனைப் பண்புத் தொகையாக்கி விரிக்குங்கால் கரியதாகிய குதிரை என விரிந்தாற்போல விரியாது உயர்ந்ததாகிய திணை என விரிக்கவேண்டும். அங்ஙனம் விரிந்துழி அஃது "உயர்" என்னும் முதல் நிலைப்பின் வந்த தகர அகரம் இறந்தகாலம் உணர்த்தியே நிற்றலின், பண்புத்தொகை ஆகாமை உணர்க. (தொல். - சொல். - நச்சினார்க்கினியருரை.)

தேவரேயாயினும், மூவரேயாயினும், மற்று யாவரேயாயினும் பொருந்தாதன திருந்தவுரைப்பரேல், மறுக்கும் மாண்புடைய நக்கீரர் வழிவந்தது நம் தமிழ்க்குலம். ஆகலின், உயர்திணையினுக்கு உயரிய இலக்கணம் இயற்ற முயன்ற முகவை. இராமானுசக் கவிராயர் நன்னூல் விருத்தியுரையில் - உயர்திணை என்பது வினைத்தொகை எனக் கூறுவாருமுண்டு. உயர்திணை உயர்ந்த திணை என இறந்தகால வினைத்தொகையாக விரித்தால், மரமானது தினந்தோறும் உயர்ந்ததை நோக்கி, உயர்மரமெனவும், கல்வியறிவு தினந்தோறும் உயர்ந்ததை நோக்கி அதனையுடையார் மேலேற்றி உயர்மக்கள் எனவும் கூறுகின்ற வினைத்தொகைபோல உயர்திணை என்பதற்கு உயரும் (புடைபெயர்ச்சி) வினை, கண்ணுக்காயினும் மனசுக்காயினும் தோன்றும்படியில்லாததினாலே அது வினைத்தொகை அன்று எனவும் காண்க - என்பதனை ஆழ எண்ணுவோமாகில், இவ்விரு உரை வள்ளல்களின் நயமுற்ற நன்பணியினை நயனொடு சீர்தூக்கும் தமிழ்க்குழுவொன்று தேவை எனவே தேறுதல் வேண்டும்!

ஆதியில் தமிழ்நூலினை அகத்தியருக்கு உணர்த்தியவர் மாதொரு பாகனுயின், ஒரு பிழைக்காக, முன்னொருநாள் நக்கீரர் முன்னிலையில் அவ்வரனுர் உரை இழந்து விழித்தமை என்னே என வினவலுற்ருர்க்கு, பொருந்தும் மறுமொழி விடுக்க 'இருந்து உளந்திருத்தி இருமைசால் உலகினை திருந்த எண்ணலன்றி நம் செயலாவது வேறு யாதொன்றுமிலை,'' எனல் வேண்டும்.

கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி (குறுந்தொகை-2.)

எனும் இன்தமிழ் தோய்ந்த பைந்தமிழ்ச் சோலைக்கு, பாண்டியன் மாறனது வாழ்வு, வரலாறு வழங்குமாயின் குறுந்தொகைச் செய்யுட்கள் எக்காலத்தன?

விடைகொடு போவா னென்றை
வேண்டினு னெருந் தேயம்
தொடைபெறு தமிழ்நா டென்று
சொல்லுப அந்த நாட்டின்
இடைபயில் மனித்த ரெல்லா
மின்றமி ழாய்ந்து கேள்வி
உடையவ ரென்ப கேட்டார்க்
குத்தர முரைத்தல் வேண்டும். (திருவிளையாடல்—2577)

என்ருங்கால் தமிழ்நாட்டின் திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்துவோமெனினும், இச் செய்யுளான் வரலாற்றுண்மை பிறழ்ச்சியடைதல் பலபடக் காண்போம். அகத்தியனுர் தமிழ் நாட்டின் தமிழ்வளத்தினை எடுத்தோதுவராகில், ஆதியில் தமிழ் ஓதப்பெற்றமை அகத்தியற்கென்றமை பொருந்துமாறெங்ஙனம்? தமிழ் நாட்டினரின் இன்தமிழ் ஆய்வினை எண்ணி அஞ்சியது கடல்குடித்த குடமுனி எனின், தமிழ் தோன்றிய காலம் எது வென வுரையறுத்தல் எம்மனோர்க்கியன்ற வொன்றன்று. "எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனை சிறிதும் நிறையாத, பத்துப்பாட்டாதி மனம் பற்றுவோர் ஈண்டு விடுத்த உண்மையினை மாநிலங்காண எண்ணுவரன்ருே? இதுபோன்ற சிதைவுற்ற சிந்தனைச் சிதறல்கள் தமிழ்இலக்கிய மாணவ மாணவியரை மயங்கச் செய்கின்றமை மறுத்தலொண்ணு மாற்றமென்ன மறுமலர்ச்சி மாண்பு நிலவிய "இலக்கியச் சிந்தனைகள்,'' எனும் நன்னூலின் ஆசிரியர் திரு. S. வையாபுரிப் புள்ளை அவர்கள் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர் என்ற முறையில் கூறிச் சேறன் மாலையராயினர்.

"விடங்கொண்ட மீனைப்போலும்,'' எனத் தொடங்கும் கருத்துடைச் செய்யுள் எந்நூலகத்துளது என வினவலுற்ற

போழ்து "விவேகசிந்தாமணிகூட அறியாயோ?" என என்னைப் பழித்தவர் ஒரு பெரிய தமிழ்ப்புலவர். மற்றும் ஒருமுறை செட்டிநாட்டு வளங்காணச் சென்றபோழ்து கூழிபிறையில் வாழும் திரு. பெரி. பெரியண்ணன் செட்டியார் "கம்பராமாயணத்தின் நல்ல பதிப்பினை கண்திறந்துப் பார்க்க வல்லாயோ?" என்றபோது, அத்தகை நூல் எங்குளது எனத்தேடி அலைகின்றது என்னுள்ளம் எனில், மேற்கூறிய அச் செய்யுளைப்பற்றிய வரலாறு வல்லார்வாய்க் கேட்க விழைவோமல்லமோ?

"தூமி தம் ஊர்புக வானவர் துள்ளினர்..........." இங்கு அமைந்த அழகுகனியும் செய்யுள் கம்பனுள்ளத்தே கவினுறத் தோன்று முன்னரேயே "தூமி" எனும் தூயசொல் பழந்தமிழ் இலக்கிய நூற்களுள் காணலாகும் என்றமை என்னே மறந்தார் சிலர்?

வானவரும் புகழ் வழங்கும் வள்ளுவர் குறளும் தமிழ் நெஞ்சத்தினைக் கொள்ளை கொள்ளுமாயினும், செல்வி, சுசீலா, நடராசா விடுத்த சிலசில இவண்வெளியிடுதல் தவறன்று. தினற் பொருட்டாற் கொல்லாது உலகு எனில் - என்னில் கொலைபுரிபவரையும், தினற்பொருட்டால் கொள்ளாது என்னில் விரும்பி உண்ணுபவரையும் சிறுமையடையுமேல், எச்சொல்லைக் கொள்ள வேண்டும்? அது செயற்கு அரியார் செயலோ அன்றி செயற்கு உரியார் செயலோ எங்ஙனம் என வினவுகின்றனமன்றோ?

அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை எனும் வள்ளுவன் வாய்மொழிக்குப் புதுப்பொருள் கொள்ளும் புலமையோர் சிலர், சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை எண்ணி அறத்தாறு இதுவென நினையாதீர் - என்பதாம். என்னே குறள் படும்பாடு!

எனவே, தமிழ்மக்கள் எந்நிலத்து வாழினும், ஆத்திசூடி தொடங்கி புறநானூறு, நற்றிணை ஈறாக எழுத்தெண்ணி இலக்கணத் துணைகொண்டு இலக்கிய நயம்காண விழைதலுறும் போழ்து, எழுகின்ற உயரிய ஐயங்களை நீக்கியருளும் தனிப்பட்ட புலமையுள்ளமோ, அன்றேல் புலமைச் சான்றோர் நிலவும் ஆய்வுக் குழுவொன்றோ தேவையாகின்றன. அப்பேறு எதிர் கொள்ளுமேல், பதிற்றுப்பத்தும், நெடுந்தொகையும் இளஞ்சிறுரின் செந்தமிழ் நாவிலே தவழ்ந்துவிடும். கண்ணுதற் பெருங் கடவுளும் தம் கழகமோடு அமர்ந்து நம் பண்ணுற்ற தமிழினை பாடிப் பரவுவாரன்றோ?

---

# தரணியாள் தமிழே

[நாஞ்சில், கா. கணபதி]

ஒளிநிறை நறுந்தமிழே உளத்தினுள் உறைபொருளே
அளிநிறை யுறுமலரே அன்புறு கனியிதழே
நனிமிகு குணவடிவே நலந்தரு உயரினமே
கனிதரு உணவுருவே கலைமிகு மதிக்குடையே
மதுவழி செறிதமிழே மணந்தரு எழிலுருவே
புதுநிலை விருந்தெனவே புகழொளி தரலெளிதே
இலகுறு செந்தமிழே எனவொரு மகிழுறவே
உலகுறு பொருளதனில் உனைநிகர் பொருளெதுவே.
பனியென ஒளிர்தமிழே பசுமையின் தெளிவெனவே
உனிலொரு கலையுணர உணர்வது மெளிதலவே
பலவகை வளமுளவே நினைபெறு எழில்தமிழே
புலமிக நிலவிடவந் தெனதுளங் கவர்தமிழே!

வேறு

அன்புமொழி இன்பமொழி என்பதாந் தமிழ்
அனைத்துலகும் வெல்லும்வழி சொல்வதாந் தமிழ்
அன்னைமொழி கன்னிமொழி என்பதாந் தமிழ்
ஆக்கும்மொழி ஊக்கும்மொழி செவ்விதாந் தமிழ்
ஆர்வமொழி தேனின்மொழி பேரிதாந் தமிழ்
தீரமொழி தெளிவுமொழி தேக்குமாம் தமிழ்
வளவன்மொழி மழலைமொழி மலையெலாந் தமிழ்
மாறன்மொழி சேரன்மொழி சோலையாந் தமிழ்
தெள்ளுமொழி விள்ளுமொழி வல்லதாந் தமிழ்
தினம்நினைய வாழும்நெறி சொல்வதாந் தமிழ்
உள்ளம்மிக அள்ளிடும்கைக் கிள்ளையாந் தமிழ்
உன்னஉள்ளத் தெள்ளமுதம் ஊட்டுமாந் தமிழ்
சங்கமெங்குந் தங்குந்திங்கத் தங்கமாந். தமிழ்
தங்குகடற் கயலுலாவுந் தரணியாள் தமிழ்.

ஓம்

# மெய்யுணர் முனிவர்

[சித்தாந்த பண்டிதர், கழகப்புலவர், ப. இராமநாத பிள்ளை]

"ஓதுவித் தாய்முன் அறவுரை காட்டி அமணரொடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக் கிற்புளி யம்வளாரால்
மோதுவிப் பாயுகப் பாய்முனி வாய்கச்சி யேகம்பனே."

ஆளுடைய அரசு, ௪-௱-௧

ஆளுடைய அரசராகிய திருநாவுக்கரசு நாயனார் செயற் கருஞ்செயல் செய்த திருவருட் பெரியார். அவர்தம் அருட் பெருஞ் செயல்கள் பலவற்றுள்ளும் சிலவற்றைத் தொகுத்துத், திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்த திருக்குறள், ௩௬- மெய் யுணர்தலுடன் ஒருபுடை ஒப்புமையாகக் காட்டுதும்.

௧. மாணுப் பிறப்பகல வாய்மைஅருள் நாடாமல்
கோணும் அமண்பொருள் கொண்டனரே—வீணும்
பொருளல் லவற்றைப் பொருளென்று உணரும்
மருளானும் மாணுப் பிறப்பு.

நிலையுதல் இல்லாத மாயா காரியமாகிய உலகியற் பொருள் களை, நிலையுதல் உடையன என மயங்கி உணரும் இருட் சார்பாம் புல்லறிவாண்மையால், திருவடிக்கு ஆளாகாத சிறுமைப் பிறப் புண்டாம். திருநாவுக்கரசு நாயனார் நிலையாமை யுணர்ந்து, அறங் கள் பல செய்து பிறப்பற முனைந்து நெறிகள் (சமயங்கள்) பலவும் ஆய்ந்தனர். மெய்யுணர்வு திருவருளால் கைவருவதொன் றாம். அது நூலானும் நுண்ணுணர்வானும் அடைவதின்று. செய்வினை, செய்வான், சேர்பயன், சேர்ப்பான் என்னும் நான் கின் உண்மையை மேற்கொள்ளும் நெறி நன்னெறியாகும். அதுவே சைவச் செந்நெறி. பெருந்தவப் பேற்றால் வழிவழி அடியராம் விழுமிய வேளாண் குலத்துத் திருவருளால் தோன்றி யும் சேர்ப்பானும் முழு முதலை ஒப்புக்கொள்ளாத அமண் நெறியை நுண்மாண் நுழைபுலத்தால் மேலெனக் கொண்டு மயங்கிச் சார்ந்தனர்.

அதனால், அவர்பொருட்டு உயிர் தாங்கி மனைத்தவம் புரிந்து அவரையும் பேணிவந்த தமக்கையார் திருவதிகை வீரட்டானத் துத் திருக்கோயில் சார்ந்து திருத்தொண்டு புரிவாராயினர். அவர் நிலை கண்டும் நம் அரசர்க்கு அருளை நாடவேண்டும் என் னும் தெருள் உணர்வு ஏற்படவில்லை. என்னே முனைப்பறிவாம் புல்லறிவாண்மையின் வன்மை!

௨. முன்னேனல் சூலை முடுகுதலும் வெண்ணீறு
முன்னேளால் பெற்றின்பம் முற்றினர்காண்—தொன்மை
இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

மாசறு காட்சியாகிய மெய்யுணர்வு கைகூடுதற்கு நல்லார் துணைவேண்டும். அவர்கள் துணையால் திருவருள் உள் நின்று அம் மெய்யுணர்வை எழுப்பும். அத்தகைய துணை திலகவதி யம்மையாராவர். அம்மையார் திருவைந்தெழுத்து ஓதிக் கொடுத்த திருவெண்ணீறு சூலைநோய்க்கும், மலப்பிணிக்கும் மருந்தாயிற்று. அவற்றால் அகம் புறம் தூய்மையாய் இருள் நீங்கி இணையடி இன்பம் எய்தினர். உடன்பிறப்பின் உதவி உரையுணர்வுக்கு எட்டாத தொன்றென்னும் உண்மை இதனால் நன்கு புலனாம்.

௩. நீற்றறையே நஞ்சுகரி நீந்தல்முந்நீர் வாய்த்ததூஉம்
கூற்றுதைத்தான் தாள்தெளிவாக் கொண்டமையே-தேற்றுதமிழ்
ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து.

ஆளுடைய அரசு ஏழுநாள் நீற்றறையும், நஞ்சுகலந்த பாற் சோறும், கொல்யானைக் கோளும், கல்லிற்பிணித்துக் கடலுள் வீழ்வும் முறையே புக்கும், உண்டும் வணக்குவித்தும், மிதந்தும் உய்ந்தமை திருவருள் வலத்தாலாதலின், உலகியற் செயலைவிட வானமாகிய திருவருட்செயல் அண்மைக் கையகத்ததாம் என்னும் மெய்ம்மை நன்கு போதரும்.

௪. புலனடக்கிப் பூமேல் புகழறங்கள் ஆற்றும்
நலஅமணும் ஓங்காமை நாடின்—புலன்மெய்யாம்
ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு.

மெய்ப்பொருளாம் தெய்வம் மன்னுயிர் அனைத்துடனும் ஒன்றாய் வேறாய் உடனாம் மெய்ப் புணர்ப்புடன் என்றும் கலந்து நின்று இயக்கிவரும் இயல்பு மாறாதது. 'அவனசையாமல் அணு வசையாது' என்னும் பழமொழி இதனை வலியுறுத்தும். அத் தகைய முழுமுத லுண்மை புத்த சமணர்கள் கொண்டிலர். அதனால், அவர்கள் ஐயுணர்வு கைவந்தார் போல் கடுந்தவம் புரிந் தும் முனைப்பறு வினைத்திறம் பலவும் ஆளுடைய அரசின்பால் ஆற்றவும் அஞ்சிலர். என்னே இவர்தம் ஐயுணர்வு எய்திய மையால் ஆம்பயன் ?

௫. தோற்றுருவம் செய்பண்பு தொக்கவுயிர் மிக்கஇறை
தோற்றுமுணர் வாய்ப்பதே சொற்றுணையாம்—சாற்றுமறை
எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

சுட்டி யுணரப்படும் உருவமும், அதன் புடைபெயர்ச்சியும், அதன் பண்பும் (உயிர்ப்பொருட்கு) அகத்துவாழ் உயிரும், அனைத்துக்கும் உயிர்க்கு உயிராம் ஆண்டவனின் கலப்பும் சேர்ந்

தால் அன்றித் தோற்றமும், புடை பெயர்ச்சியும், பிறவும் நிகழா. எனவே, ஒவ்வொரு பொருளையும் காணுந்தோறும் பிள்ளையைக் காணும்தோறும் பெற்றோரும், மாணுக்கரைக் காணும்தோறும் ஆசானும் நினைவுக்கு வரவேண்டுமாறுபோல இறைவன் திருவருளும் நினைவுக்கு வருதல் வேண்டும். பொருள்மறைச் சிவயநம என்னும் ஐந்தெழுத்தைப் பொருளுடன் ஓதுவார்க்கு இந்நினைவு தானே வந்துறும். அதுபற்றியே "சொற்றுணை வேதியன்" என்னும் திருப்பாட்டும் அருளப் பெறுவதாயிற்று. தேங்காய் என்னும் சொல் பிறந்ததும் மட்டைக்கும், கொட்டாங்கச்சிக்கும், ஓட்டுக்கும் உள்ளிருக்கும் வெண்பருப்பே நினைவுக்கு வரும் இயல்புபோல், திருவருள் நினைவால் காணும் பொருளில் உடனுறையும் ஆண்டவனைக் காண்பதே கற்றதனுலாய பயனும்.

சு. சூல்விடை நற்றுள்கள் தோள்தலைக் கொண்டரசர்
மால்அருளால் வாராமை மன்னினர்காண்—ஆல்அருளால்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

ஆண்டவன் அடியிணையை மறவாமலிருக்கும் அடையாளம் சூலம், விடை, திருவடி. இவை பிறிதின் கிழமைப் பொருள்களேனும், ஆண்டவன் திருவருளால் முறையே திருப்பெண்ணுகடத்தும், திருநல்லூரிலும் ஆளுடைய அரசின் வேண்டுகோளின் படி அவர்தம் தோளிலும், முடியிலும் அருளால் பொருத்தப் பெற்றன. இதுவே கற்றலும், கேட்டலும், நினைதலும், கருத்திருத்தலும், கனிந்துணர்தலுமாம் மெய்ப்பொருள் காண்டலாகும். அம்மெய்ப் பொருள் கண்டாரே பிறவாப் பெருவாழ்வுறுவர்.

எ. உள்ள முதலதனை உன்னலால் வாய்மூர்க்கண்
வள்ளல் அழைத்து வழியடைத்தார்—தெள்ளுமறை
ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

என்றும் நின்றுநிலவும் இறைவனும் முழுமுதல்வன் திருவடியை நல்லவாறு நினைத்துத் துயில்வாரை ஆண்டவன் விளித்து அருள்புரியும் மாண்பு இதன்கண் விளக்கப்பட்டுள்ளது. இப் பெருந்தன்மையானன்றே! நம் அப்பரடிகள் வீடெய்தி வாழ்வாராயினர். இதுவே உள்ளதுணர்தலாம்.

அ. "ஈசன் எனும்கனியை" ஈங்குணர்த்தி ஆங்குற்றுர்
பேசுபுகழ் நாவரசர் பெம்மான்தாள்—மாசு
பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு.

நம் நாவரசர் தாம்பெற்ற இன்பம் வையகம் பெறவேண்டும் என்னும் தண்ணளியால்,

"மனிதர் காள்இங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தால்கனி உண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசன் எனும்கனி
இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே" ஆளுடையஅரசு, ரு, ௨௦ரு-௭

என்னும் திருப்பாட்டு அருள்வாராயினர். இதுவே மெய்ப் பொருள் காண்பதின் பயனாகும். மெய்ப்பொருள் கண்டார் ஏனையார்க் குணர்த்தும் எய்ப்பில் வைப்பால் சிறப்பென்னும் செம்பொருளைச் சேர்வர். இதுவே இறைபணியாகும்.

௯. வெள்ளிமலை கண்டுதொழ மேவி உரனற்றும்
உள்ளமறு நல்லொழுக்கால் ஐயாற்றில்—கொள்ளலுற்றார்
சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்.

திருக்காளத்தி மலையைக் கண்டு தொழுது கனிதலும் கைலை காணவேண்டும் என்னும் காதல் தோன்றிற்று அப்பரடி கட்கு. வழியெலாங் கடந்து கைலைமலை ஏறுங்கால் உறுப்பற்று உரனற்றுக் கிடையாக் கிடந்தனர். ஏனைச் சார்பின்றி இறை சார்பாய் நின்றமையால், ஏனைச்சார்பாம் உடலுறுப்பை வென்ற னர். திருவையாற்றில் கைலைகண்டு களித்தனர். அக்களிப் பைத் திருமுறை வைப்பால் நமக்கு அருளினர். இதுவே சார்பின் பயன்.

௧௦. பொன்மணிபெண் மையல் புகலூரில் போக்கினரே
மன்னுமிறை நெஞ்சிலுறை மாண்பதனால்—தொன்மறைகாண்
காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய்.

திருப்புகலூரில் திருத்தொண்டியற்றிக் கொண்டிருக்குங் கால் இவர்தம் நிலையில் திரியா அடக்கத்தினை உலகுணர்த்துப்ப இறைவன் திருவுள்ளங் கொள்வாராயினர். உயிர்ப்பொருளா லும் உயிரல் பொருளாலும் காமம் எழும். அவற்றால் வெகுளி தோன்றும். அவ்வெகுளியின் அடிப்படை இருள் மயக்க மாகும். இம்மூன்றும் இறையருளால் அகலின் வீடுபேறு கிட் டும். இதுவே மெய்யுணர்வின் பயன். உழவாரப்படை சென்ற இடமெல்லாம் செம்பொன்னும் நவமணியும் தோன்றின. அவற் றைக் குப்பையொடுங் கொட்டினர். வானர மகளிர் வந் தாடினர். சித்தநிலை திரியாது சிவனடியே நாடினர். சித்திரைச் சதயமாம் திருநாளில் சிவனடிநீழல் எய்தினர்.

வள்ளுவர் நாவரசர் வாய்மையடி வாழ்கநாம்
உள்ளுவவெல் லாமருளல் உற்று.

# தமிழ்நாட்டு விளையாட்டு

## 3. கிட்டிப்புள்

[திரு. ஞா. தேவநேயன் எம். ஏ.]

### விளையாட்டின் பெயர்

தமிழ்நாட்டு விளையாட்டுக்களில் கிட்டிப்புள் என்பதும் ஒன்றாகும். இது பாண்டிநாட்டில் சில்லாங்குச்சு என வழங்கும். சோழநாட்டிலும் கொங்குநாட்டிலும் கிட்டிப்புள் என்னும் பெயரொடு, கில்லித்தாண்டு என்னும் பெயரும் இதற்கு வழங்குகின்றது. சேர நாடாகிய மலையாள நாட்டில் இது கொட்டிப்புள் எனப்படுகின்றது. ஆங்கில நாட்டில் இதற்கொத்த விளையாட்டு Tip cat என்பதாகும்.

### விளையாட்டுக்கருவிகள்

இருவிரல் (அங்குலம்) முதல் அறுவிரல் வரை நீளமும், இருவிரல் முதல் நால் விரல்வரை சுற்றளவும், ஒரு நுனியில் கூர்மையும், உள்ள ஓர் உருண்ட குச்சும்; ஒரு முழம் முதல் இரு முழம் வரை (அவரவர் கைக்கேற்றவாறு) நீளமும், இரு விரல்முதல் நால்விரல்வரை சுற்றளவும், ஒரு தலையிற் சிறிது கூர்மையும், உள்ள ஓர் உருண்ட கோலும், இவ்விளையாட்டிற்குரிய கருவிகளாம். பெரும்பாலும், குச்சும் கோலும் ஒரே சுற்றளவினவாக இருக்கும். குச்சிற்குப் புள், சில்லாங்குச்சு (சில்), கில்லி என்னும் பெயர்களும்; கோலிற்குக் கிட்டி, கொட்டி, கம்பு, தாண்டு என்னும் பெயர்களும் உரியன.

### விளையாடுவார் தொகை

இவ்விளையாட்டை ஆடக் குறைந்தது இருவர் வேண்டும். பலராயின், உடன்பாட்டின் படியும், முன்பு கிளித்தட்டிற்கும் சடுகுடுவிற்குங் கூறியவாறு உத்திகட்டியும், சமதொகையினரான இரு கட்சியாகப் பிரிந்து கொள்வர். இருவர் ஆடினும் பலர் ஆடினும் ஆடுமுறை யொன்றே. ஆயின், ஒவ்வோர் இணையர்க்கும் ஒவ்வொரு கோலுங் குச்சும் இன்றியமையாதன. சில சமையங்களில், ஒவ்வொருவனும் தனித்தனி தான்தான் பயின்ற கருவிகளை வைத்துக்கொள்வது முண்டு.

### விளையாடுங்காலமும் இடமும்

இவ்விளையாட்டு, பகற்காலத்தில் அரைப்படைச்சால் ($\frac{1}{2}$ furlong) நீளமும் அதனையடுத்த அகலமுமுள்ள ஒருநிலப்பகுதியிலா

வது, பரந்த வெளிநிலத்திலாவது, சிறுவராலும் சிறுபான்மை இளைஞராலும் ஆடப்பெறும். மகளிர் இதை ஆடுவதில்லை.

**விளையாடு முறை**

ஆடும் இருவருள் யார் விளையாட்டைத் தொடங்குவதென்பது, உடன்பாட்டாலும், காசு சுண்டுதல் ஓடெறிதல் முதலிய திருவுளக் குறியாலும், துணியப்படும்.

விளையாட்டைத் தொடங்குபவன், தன் கோலின் கூரிய தலையால், தான் வைத்திருக்குங் குச்சின் பாதியளவு நீளமும் அரைவிரல் முதல் ஒருவிரல் வரை யாழமும் உள்ள, ஒரு சிறு பள்ளம் நிலத்திற் கில்லி, அதிற் குச்சின் அடி (மொட்டை)ப் பக்கம் அமையுமாறு அதை மேனோக்கிய சாய்வாக வைத்து, அதன் நுனியிற் கோலால் மெல்லத் தட்டியெழுப்பி, அது எழும்பியவுடன் மீண்டும் அதைக் கோலால் வலிமையாக அடித்து, இயன்றதொலைவு போக்குவான். முதன் முறையிலேயே குச்சு எழும்பியவுடன் அதை அடிக்கத் தவறியவன் தோற்றவனாவன். அதன்பின் அடுத்தவன் அடிக்க வேண்டும். யார் அடிப்பினும் குச்சையடித்துப் போக்கியபின், எடுத்தடிக்கும் நிலையில் கோலைக் குழியருகே கிடத்தி நிற்கவேண்டும்.

இன்னொருவன், தொலைவில் குச்சுப் போகும்திசையிலும் அது விழக்கூடிய இடத்திலும் நின்று கொண்டிருந்து, அது நிலத்தில் விழுமுன் அதைப்பிடிக்க முயல்வான். பிடித்துவிடின், அவன் குச்சடிப்பவனாகவும், முன்பு அடித்தவன் அதை எடுப்பவனாகவும், மாறவேண்டும். பிடிக்க முடியாவிடின், குச்சு நிலத்தில் விழுந்தவுடன் அதையெடுத்து, அடித்தவன் குழியருகே கிடத்தியிருக்கும் கோலிற் படும்படி யெறியவேண்டும். கோலிற் பட்டுவிடின், அன்றும் இருவர் நிலைமையும் மாறும். படாவிடின் அடிப்பவன் விரைவாய்க் குச்சை யெடுத்து அதை முன்புபோல் அடித்துப் போக்குவான். அவன் அதை அடிக்குமுன் குச்செடுப்பவன் வேகமாய் ஓடிப்போய் அவனைத் தொட்டுவிடின், அன்றும், இருவர் நிலைமையும் மாறும். தொடாவிடின், குச்செடுத்தவன் முன்போற் குச்செடுக்க வேண்டும். இங்ஙனம், இருவரும் விரும்பியவரை தொடர்ந்து ஆடுவர்.

பல இணையர் சேர்ந்து ஆடின், ஒரு கட்சியார் அடிப்பாரும் ஒரு கட்சியார் எடுப்பாருமாயிருப்பர். ஒவ்வொருவனும் அடிக்குங் குச்சை அவ்வவனுடன் உத்திகட்டிய இணைஞனே எடுப்பான். இணைஞனுக்கு உத்தியாள் என்று பெயர். அடிக்குங் கட்சியார், ஒவ்வொருவனாகவோ, ஒருங்கேயோ, அனைவரும்

தொலையும்வரை (அதாவது தோற்கும் வரை) எதிர்க்கட்சி நிலைமை மாருது. ஆயின், அடிக்குங் கட்சியாளர் தொலையத் தொலைய, அவருடைய இணைஞரான எதிர்க்கட்சியாளர் நின்று கொண்டே வருவர். அடிக்குங் கட்சியின் இறுதியாளும் தொலைந்தபின், இருகட்சியும் வினைமாறும்.

**விளையாட்டுத் தோன்றியவகை**

இவ்விளையாட்டு வேட்டை வினையினின்று தோன்றியதாகத் தெரிகின்றது. குறிஞ்சி நிலத்திலுள்ள குறவரும், குறிஞ்சி நிலத்திலும் பாலை நிலத்திலுமுள்ள வேடரும், காட்டிலுள்ள கோழி முயல் முதலிய ஒருசார் உயிரிகளைக் குறுந்தடிகொண்டே யெறிந்து கொல்லுவது வழக்கம். "கோழியடிக்கக் குறுந்தடி வேண்டுமா?" என்னும் பழமொழி இவ்வழக்கத்தினின்றே எழுந்துளது. இன்று, வீட்டுக்கோழியைக் கருதுபவரே கோழி யடிக்கக் குறுந்தடி வேண்டுவதில்லை யென்பர். காட்டுக் கோழிக்கோ என்றும் குறுந்தடி வேண்டும்.

ஒரு குறவனும், அவன் கையாளான சிங்கன் என்னுங் குளுவனும், குறுந்தடிகொண்டு வேட்டையாடின், குறவன் புதர் புதராய்க் குறுந்தடியால் தட்டிப்பார்ப்பான். ஒரு புதரினின்று திடுமென்று ஒரு காட்டுக்கோழி பறக்கும், அல்லது முயல் குதிக்கும். அந்நொடியே, குறவன் அதைக் குறுந்தடியால் அடிப்பான், அல்லது எறிவான். கோழி அல்லது முயல் அடிபட்டுச் சற்றுத் தொலைவிற்போய் விழும். குளுவன் ஓடிப்போய் அதை எடுத்து வருவான். இங்ஙனம் பலமுறை நிகழும். குறவனெடு கூடிப் பலமுறை வேட்டையாடிக் குளுவனும் தேர்ச்சிபெற்றிருப்பான். குறவனுக்கு என்றேனும் குறி தப்பி, குளுவன் அவனிலுங் குறி தப்பாது அடிக்கவலனயிருப்பின், இருவரும் வினைமாறுவது இயல்பு. பின்னர், குளுவன் என்றேனுந் தப்பின், ஏற்கெனவே அதை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் குறவன், மீண்டும் தன் தலைமைவினையை மேற்கொள்வான். இங்ஙனம் இருவரும் அடிக்கடி வினைமாறுவது இயல்பே. வேறு நிலத்தினின்று இருவர் வேட்டையாடச் செல்லினும், இந்நிலையே நேரும்; இருவரும் வினைதெரிந்தாராயிருப்பின்.

இத்தகைய வேட்டை வினையையே கிட்டிப்புள் குறிக்கின்றது. குச்சை அடிப்பவன் அதைத் தட்டியெழுப்புவது, குறவன் புதரைத் தட்டிக் கோழி முயலை எழுப்புவது போன்றது. குச்சை மீண்டும் அடிப்பது, அவ்வுயிரிகளைக் குணிலால் அடிப்பதும் எறிவதும்போன்றது. குச்சு தொலைவிற் போய்விழுவது, அடிபட்டவுயிரிகள் தொலைவிற்போய் விழுவது போன்றது.

குச்சை எடுப்பவன் அதை எடுத்தெறிவது, அடிபட்டு விழுந்த உயிரிகளைக் குளுவன் எடுத்துவருவது போன்றது. அடிபட்டவுயிரிகள் இறந்துபோயிருப்பின், முட்குத்தின நிலையிலும், பிறவினைமேற் செல்லுமிடத்தும், குளுவன் சற்றுத்தொலைவிலிருந்தே அவற்றைக் குறவனிடம் எறிவதுமுண்டு. குச்சு விழுமுன் அதை அந்தரத்திற் பிடிப்பது, அடிபட்டுத் தாழப்பறக்கும் பறவையைக் குளுவன் குதித்துப்பிடிப்பது போன்றது. குச்சை அடிப்பவன் அடி தப்பின் அதை எடுப்பவனாக மாறுவது, குறவன் அடிதப்பின் குளுவன் வினையை மேற்கொள்வதுபோன்றது. அடிப்பவனும் எடுப்பவனும் அடிக்கடி வினைமாறுவது, குறவனுங் குளுவனும் அடிக்கடி வினைமாறுவதுபோன்றது. இங்ஙனம் கிட்டிப்புள் காட்டுக்கோழி வேட்டையைப் பின்பற்றியதினாலேயே, குச்சு புள் எனப்பட்டதுபோலும்!

வேட்டைக்குச் சிறந்த குறிஞ்சிநிலம் மிக்க சேர நாட்டில் இவ்விளையாட்டு கொட்டிப்புள் எனப்படுவதும், கொட்டுதல் என்பது தட்டுதலை அல்லது அடித்தலைக் குறிப்பதும், கவனிக்கத் தக்கன. கொட்டிப்புள் என்னும் பெயரே கிட்டிப்புள் எனத் திரிந்திருத்தல் வேண்டும்.

வேட்டுவர் ஊர்களில், ஊர் நடுவே முயல் ஓடுவதும் மனைமுற்றத்தில் காயும் தினையைக் காட்டுக்கோழி தின்பதும், உண்டு. அன்று அவை குணிலெறிந்து கொல்லப்படும்.

இவ்வுண்மை, முறையே புறநானூறு 333, 320-ஆம் செய்யுட்களான் விளங்கும்.

கோழியறுத்துண்டலைக் 'கோழியடித்தல்' என்னும் வழக்கு பண்டை நிலைமையை உணர்த்துவதாகும்.

**விளையாட்டின் பயன்**

மேலெழும் ஒருபொருளை விரைந்து குறிதப்பாது வன்மையாய் அடிப்பதும், வானின்று விழும் பொருளை அது தகாத இடத்தில் விழுமுன்னும் தாழப்பறக்கும் பறவையை அது தன்னிடத்தைவிட்டுக் கடக்குமுன்னும் பிடிப்பதும், தொலைவிலுள்ள பொருளைக் குறி தப்பாது ஒரு கருவியால் அடிப்பதும், ஒரு பொருளைத் தொலைவிலுள்ள குறித்த இடத்திற்கு எறிவதும், கோல்களைப் பட்டையுரித்து முனையைக் கூராகச் சீவுவதும், ஆகிய வினைப்பயிற்சியே இவ்விளையாட்டின் பயனும்.

# செய்திகளும் குறிப்புக்களும்

**தென்னிந்திய தமிழ்ச்சங்கம் - தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வு:**

சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் தேர்வுக்குப் பல புலவர் கல்லூரியிலும் பயின்று வருகின்ற மாணவர்களும், ஆசிரியராகவோ, அல்லது தமிழ்ப் பற்றுளராகவோ தமிழைப் பயின்று மேற்படி வித்துவான் பட்ட மடைய விழைகின்ற பிறரும், தம் தேர்வுப் பயிற்சியில் ஊக்கமுறும் பொருட்டு இச் சங்கத்தார் 1951-ம் ஆண்டு மாசித் திங்கள்முதல் தேர்தல் நடத்தி வருகின்றனர்.

இத் தேர்வுகளில் முதல் தகுதியில் தேர்ச்சியுறும் முதல் மூவருக்குப் பரிசுகளும் தகுதித் தாள்களும், நூற்றுக்கு நாற்பது விழுக் காட்டிற்குக் குறையாதிருக்கும் பிறர்க்குத் தகுதித் தாள்களும் வழங்கப்பெறும். இவ் யாண்டு மேற்குறித்த புலவர் மாணவர் தேர்வு 18-2-1952-ம் தேதி (மாசித் திங்கள் 6-ம் நாள்) திங்கட் கிழமைமுதல் நடைபெறும். மாகாணத்தி லுள்ள ஒவ்வொரு புலவர் கல்லூரியிலும் திருநெல்வேலி, சென்னையில் உள்ள தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக நிலையங்களிலும் நடைபெறும்.

வித்துவான் பட்டம் பெறும் அறிஞர்கள் உயிர்க்கு உறுதி பயக்கும் சித்தாந்தநூற் பாடங்களிலும் தேர்ச்சி பெறுவது நலமெனக் கருதிச் சித்தாந்தநூற் பாடத் தேர்வு நடைபெறும். மேற்குறித்த புகுமுகம், வித்துவான் முதனிலை, வித்துவான் இறுதிநிலை, ஆகிய வகுப்புக்கட்கு இவ் விதழில் முன் வெளியிடப்பட்டுள்ள பாடங்களே. விண்ணப்பதார்கள் முறையே 0-8-0, 0-12-0, 1-0-0 ஆகிய கட்டண வீதத்துடன் விண்ணப்பங் களை ஜூன் 30-6-1952-ம் தேதிக்குள் அடியிற் கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்க வேண்டும். தேர்வு பற்றிய பிற விளக்கங்களுக்குத் தனியே, புலவர் குழுத்தலைவர், தென்னிந்திய தமிழ்ச்சங்கம், 24, கீழைத் தேர்த்தெரு, திருநெல்வேலி என்ற முகவரிக்கு எழுதுக. சித்தாந்தப் பாடநூல் தேர்வு 28-7-1952-ம் தேதி (ஆடித் திங்கள் 13-ம் நாள்) திங்கட்கிழமை நடை பெறும்.

**திருப்பாவை திருவெம்பாவை மாநாடு**

செந்தமிழ்ச் செந்நெறியின் இருகண்களாகத் திகழும் இருபெரு அருள்நூலின் மாநாடுகள் வழக்கம்போல் சான்றோர் பலர் தலைமைப்பால் புலவர் பலர் விரிவுரையாற்ற மாணவ மாணவியர் ஓத, ஊர்வலம் வருதல் முதலிய சிறப்புக்களுடன் பல திருவூர்களிலும் நிகழ்ந்தமை போற்றற் குரியதே. பட்டுக்கோட்டை, காஞ்சிபுரம், திருமயம், புதுக்கோட்டை, சேலம்.

**கந்தர் கலிவெண்பாப் பரிசு**

காசி மடத்தின் நன்கொடை: லால்குடிப் பெண்கள் உயர்நிலைப் பள்ளி மாணவிகளுக்கு இவ்வாண்டு அறக்கட்டளை வருவாயிலிருந்து ரூ. 405 வழங்கப்பட்டுள்ளது. பரிசுபெற்ற மாணவியர் முறையே திருமதி. சி. சகுந்தலா, ஏ. கமலம், டி. எம். ஆண்டாள், பி. மணிமேகலை, எஸ். இராதா, சி. என். பத்மாவதி, ஏ. சி. சுந்தரகலியாணி, ஜி. கலியாணி.

### பிள்ளையாரைப்பற்றிய வெள்ளையர்

தமிழகத்தின் திருக்கோவில் அமைப்பு, ஓவியம், சிற்பம் முதலியவற்றின் அமைப்பைக் கண்டுகளிக்க வந்துள்ள பிரித்தானியக் கலைத்திறலோர் திரு. செட்டுருட்கெர்மான் மதுரை முதலிய சிறந்த இடங்களைப் பார்வையிட்டுள்ளார். பிள்ளையார் திருவுருவம் காண்பார் உள்ளத்தைத் தன்பால் ஈர்த்துக் கொள்ளைகொள்ளும் மாண்பமைந்ததொன்று. இத் திருவுருவத்தைப் பற்றியும், இத் திருவுருவம் ஆக்கப்பட்டுள்ள பொருள்களைப்பற்றியும் பிற திருவுருவங்களைப்பற்றியும் மேனாட்டார் எளிதில் புரிந்துகொள்ளும் வழியாக ஒரு சிறந்தநூல் வெளிவரவேண்டுமென்றனர்.

### திரு. வி. க. அவர்களுக்கு நிகழ்த்திய பாராட்டு

சென்னைத் தமிழ்ச்சங்கச் சார்பில் சங்க ஆண்டுவிழாவின்போது உயர் மன்ற நடுவர் W. S. கிருட்டினசாமி நாயுடு அவர்கள் தலைமையில் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்களின் அருந்தொண்டைப் பாராட்டிக் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் மறைத்திரு. அருணாசல தேசிக சுவாமிகளைக்கொண்டு அவர்களுக்குப் பொன்னாடை சாத்திப் பொலிவித்தனர். கோயம்புத்தூர் திரு. சி. எஸ். இரத்தினசபாபதி முதலியாரவர்களும் பிற தக்கார்களும் கலந்துகொண்டமை பாராட்டத்தக்கதேயாம்.

### பெண்பாலார்க்கு முதன்முதல் வழங்கிய பேறு

மாவட்ட மருத்துவத்துறை முதன்மை (ஜில்லா அதிகாரி)யராகப் பெண்பால் நால்வர் முதன்முதலாகத் தெரிந்தெடுக்கப்பட்டமை சிறப்புடைத்தொன்றாம். திருமதி. டாக்டர் கே. சொக்கலிங்கம், (டாக்டர் சிவில் சர்ச்சண்ட்) திருமதி. எஸ். சுப்புலட்சுமி, திருமதி. டாக்டர் மதுரநாயகம், டாக்டர் குமாரி. ஏ. வர்க்கீஸ் ஆவர். இவர்கள் முறையே சித்தூர், இராமநாதபுரம், செங்கற்பட்டு, விசாகபட்டணம் முதலிய ஊர்களுக்கு ஏற்படுத்தப்பட்டுள்ளார்கள்.

### நல்லாசிரியர் பரிசு

திருநெல்வேலி—ஸ்ரீவைகுண்டம் திரு. குமரகுருபர சுவாமிகள் மாணவர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்களுக்குள் எல்லா வகையானும் தகுதி வாய்ந்த முதன்மையர்க்கு ஆண்டுதோறும் நூறு ரூபா வழங்க மூவாயிரத்தைஞ்ஞூறு ரூபா கட்டளை திருப்பனந்தாள் மறைத்திரு. காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் ஏற்படுத்தியுள்ளார்கள். இது திரு. மாசிலாமணி தேசிக ஞானசம்பந்தர் நினைவுக்கொடை என வழங்கப்பெறும்.

### மிகு விளைவுக்குப் பட்டமும் பரிசும்

அரசியல் பயிர்த்துறை அலுவலாளர் அறிவுரையின்படி சேலம் மாவட்ட மிகுவிளைவினைச் செய்தார் போட்டியிற் கலந்த பலரில் திரு. வெள்ளைய கவுண்டர் அவர்கள் ஓர் ஏக்கர் நிலத்தில் 12000 இராத்தல் கிட்டத்தட்ட நூறு மூட்டை நெல் விளைவித்திருப்பதற்காக அவருக்குக் கிருஷி பண்டிட் என்ற பட்டமும், ரூ. 1000 ரொக்கப் பரிசும் இந்திய முதலமைச்சரால் அளிக்கப்பட்டுள்ளது.

# மாண்புறு மணிவிழா

## விழாச்செல்வர்

திருமதி டாக்டர் S. தருமாம்பாள் அம்மையார் அவர்கள், திரு. பேராசிரியர் புலவர். மயிலை சிவமுத்து அவர்கள், விழாத்தலைவர் தமிழ்ப் பெரியார் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள், விழா சென்னை மாணவர் மன்றச் சார்பில் 5-1-1952-இல் சென்னை கோகலே மண்டபத்தில் நிகழ்த்தப்பெற்றது. தமிழார்வமும், தொண்டு பேணலும் வாழ்வாகக் கொண்டொழுகும் புலவர் பெருமக்கள் இருபாலாரும் பெருந்திரளினராகக் குழுமியிருந்தனர். வெளியூர், உள்ளூர்க் கழகங்கள் பல வாழ்த்துரை படித்தளித்து வனப்புச் செய்தன. மாணவர் மன்றச் சார்பில் இருவர்தம் விரிந்த வரலாறும் தொண்டும் வாய்ந்த மணிவிழா வெளியீடு வழங்கப் பெற்றது.

### பாராட்டு

இருவரும் சென்னை மாணவர் மன்றத்து மன்னுயிராவர். முறையே மன்றத் தலைவராகவும், தேர்வுக்குழுத் தலைவராகவும், காப்பாளராகவும் அமைந்து கடனாற்றி வருகின்றனர். இந்தி எதிர்ப்பில் பெருமக்களுக்கு உண்மையுணர்த்தி உணர்ச்சியையூட்டி தன்னொத்தார் சிலர் பலர் துணை கூட்டி, ஆங்காங்கே கூட்டங்களும் மாநாடுகளும் நிகழ்த்தி வென்றியும் கொண்டனர். அம்மையார் விழுச்சிறைபுக்கு மீண்டனர்.

எங்கேனும் தமிழுக்கு ஊறுநேரின் இருவரும் கடிதணைந்து முடிவன செய்து ஊறுநீக்கிப் பண்டுபோல் நிலைநிறுத்துவர். அறுபதாண்டு நிறைவெய்திய இருவரும் இளையா உள்ளத்தால் இளைஞரேபோன்று சோர்வின்றி ஆர்வமுடன் தொண்டியற்றுகின்றனர். இத்தொண்டு என்றும் நின்று நிலவுக. இவர்களும் ஆண்டவனருளால் வேண்டுவபெற்று நீடு வாழ்க.

---

### மன்றச் சிறப்பு

இம்மன்றம் சென்னைமுதல் கன்னியாகுமரி ஈறாகவுள்ள தமிழக முற்றுமுள்ள தமிழ்க்கல்லூரி, ஆங்கிலக் கல்லூரி, பிற கல்லூரி மாணவர்கள் தமிழார்வமுற்று மேன்மேலும் தமிழை ஊக்கமொடுங் கற்று உயரத் தமிழ்த்தேர்வுகள் ஆண்டுதோறும் ஆங்காங்கே நிகழ்த்தி வெற்றியுற்றார்க்கு நற்சான்றிதழும் பதக்கமும் பரிசும் வழங்கி வருகின்றது. ஆயிரக்கணக்கினரான மாணவர்கள் முன்னேறுதற்குப் பெரும் வாய்ப்பாக இருக்கின்றது. புலவர்தேர்வு முதலியவற்றுக்கும் தமிழ்வளர்ச்சிக்கும் மாணவர்கட்கு நன்கொடையாகக் கற்பித்து வருகின்றது.

இம்மன்றம் சில இளைஞர்களால் துவங்கப்பெற்று இவ்விரு பெருந் தகையாராலும் வளர்க்கப்பெற்று இருபது ஆண்டுகள் எய்தித் திகழ்கின்றது. இதுகாறும் செல்வர், புரவலர், புலவர், பெருமக்கள் பொருள் துணையால் முட்டின்றி நிகழ்ந்து வருகின்றது. மேலும் நிகழப் பெரும் பொருள்வைப்பும், தனக்கென உரிய தனிப்பெருங் கட்டடமும் அமைதல் வேண்டும். அதற்குத் தமிழ்ச்செல்வர்களும் தமிழார்வமுள்ள பெருமக்களும் துணைநின்று வேண்டுவ செய்யும் கடப்பாட்டினராவர்.

**குறிக்கோள்**

ஒருவர் அருந்தொண்டினையும் அவர்தம் அகவை முதிர்வினையும் மணிவிழா முதலியவற்றால் சிறப்பித்துப் பாராட்டுவது, பின்னுள்ளாரும் அவரொத்து நடந்து நாடு மொழி நன்னெறி முதலியவற்றை என்றென்றும் பீடுறச்செய்யும் பெரும்பேறேயாம். மாணவர் மன்றம் தன் கிளைகளைப் பல்வேறு ஊர்களில் தோற்றுவித்துத் தான் தாய்நிலையாக நிலைத்து நின்று தமிழ்த்தொண்டு ஆற்றத் தமிழன்னை தண்ணளி புரிவாளாக.

தமிழகத்தில் தொன்மைபோல் தமிழ்தான் ஓங்கத்
　　தான்உன்னி ஆண்டுதொள் ஐந் நான்கின் முன்னர்
அமிழ்தனைய சொல்லிளைஞர் சில்லோர் கூடி
　　ஆக்கியமா ணவர்மன்றம் அன்னை அத்தத்
தமிழ்தழீஇய சாயலிவர் சலிப்பில் ஊக்கால்
　　தழைத்தோங்கி மாணவர்க்குத் தமிழ்மூச் சாகும்
அமிழ்தளித்திங் கெண்ணிலவர் ஆர்வங் கொள்ள
　　ஆற்றுமருந் தொண்டென்றும் வாழ்க வாழ்க!

மாணவர்தம் மன்றம் வளர்ந்தோங்கச் செய்கையெல்லாம்
வேணவா செய்யும் விழுமியோர்—காணும்நல்
ஆறுபத்து யாண்டோங்க அம்மன்றத் தொண்டோங்க
ஈறில்தமிழ் வாழ்க இனிது.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2/140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



ஓவியப்புலவர்

அ. செகந்நாதாச்சாரியார்

| | |
|---|---|
| தோற்றம் : | மறைவு : |
| 21 — 11 — 1876. | 21 — 1 — 1952. |